பின்களை பார்ப்ப தகாது அதனுள் வேறு இழிந்தபோ தினைத் தினைவது போலாம்.

கொண்டுந்த துணையாய் உடன் செல்வானை யறியாத வழிப்போக்கனை போலவும், உயிர் அறிவிப்பதைத் அறியா தூங்கோதிகள் போலவும், உயிர் தன்னை அறிவிக்கும் இறை யறிவாய நிற்றலை யறியமாட்டாது.

நமக்கு ஆதாரம் நிலமென்பதை மனத்திற் கருதாது, நம்முடைய நமக்கு ஆதாரமானதென்று செருமாப்போல உயிர்கள் நமக்கு ஆதாரமாய உயர்ந்த நிற்றலை அறியா திருக்கும்.

மலை நின்று விழுந்தோர் நம ஆதாரமாகிய நிலத்தை யகன்று விழுந்தோராம் வானத்தில் நின்று விழுந்தோர் நம உயர்ந்த இறை ஞானத்தை யிழந்தோரும், நமக்குக் கேடு சூழ்ந்தவராவர்.

பொய்ப் பொருட் பற்றில் நலை நின்ற உயிர்களின் முறைமை எவ்வாறிருக்கிறதென்னில், அது வெள்ளைத் தில நின்று நீர் பருகாது தாகத்தினால் வருந்துவதும், எங்கும் கதிரவனொளி பரவி விட்டதின்பு, இருள் இனமும் எங்கும் உளதென்று உணர்வதும் போலாம்.

பரம்பரையின் ஆட்கள் அமைதியோடு கேளுங்கள். இன்னும் இது எப்படியிருக்கிறதென்னில், பாற்குடத்தின் மேலுள்ள பூனையானது, பாலை நுகராது அருகிலோடும் சுரப்பான பூச்சியைப் பிடித்துத் துயலு முறைமையைத் தாமென்க.

அனாதி தொடங்கி இதுவரை உடனே கலந்திருக்கும் அருளினொடு யாதொரு பழக்கமுமில்லாத அறிவிலியாய

யிராகு வீடு சேர்தலில்லையாது வேண்டாத தொன்று போலும்.

## 5. அருளுரு நிலை

கடந்த காலத்தே உயிர்க்குத் தோன்றாத் துணையாய் அறிவித்துதவிய அருள் முதல்வனே கட்டு நீங்குங் காலத்தே காணப்படும் ஒரு வடிவத்தோடு கலந்து நின்று சிவஞானத் தைக் கொடுத்து உயிரை விட்டு நீங்காத் தலைவனாய் விளங்கு பவன்.

ஒரு வீட்டில் ஒருவருக்குள்ள பிணியை அவ்வீட்டி லுள்ளார் அன்றி உலகத்தவர் அறியாமை போல, உயிர்க் குள்ள மல நோயை உயிரிற் கலந்துள்ள இறைவனே யறியும். பிறரறியார்.

அருளுருத் தோன்றலாகிய, ஆசான் வாயில் மறைந்து அருள் செய்ய வந்த திருவருளை உலகில் யார் அறிய முடியும்?

பொய்யாம் உடலையும் இருள் மலத்தால் மறைந்த அறிவையும் உடையராய்ச் சிவஞானம் பெறுதற்குரிய முதிர்வுமை இல்லாதவர்கள் இவ்வு ஞானத்தையும் அதுபற்றிய திருவடியின் இயல்பையும் சிறிதுங் காணமாட்டார்.

விலங்கு, பறவை முதலியவைகளைப் பிடித்தற்கு அவை போன்ற வடிவங்கள் அமைத்தாற்போல, இறைவனும், மக்களைப் பிடித்தற்குக் குரு வடிவாய மக்கட் சட்டை சாத்தி வருவதை உலகர் அறியார்.

எமக்கு இறைவனது குரு வடிவு யாது பயன்படு மென்னில், எவனுக்கு எவை விளங்குகின்றனவோ, அவை

ஒருவனாகிய இறைவன், பலவாய உயிர்கள், இருண் மலம், வினை, இருவகை மாயை, ஆகிய ஆறு பொருள்களும் அநாதியே யுள்ளவை.

நீ உய்தற்பொருட்டு, வினையைச் செய்வானும், வினையும், அதன் பயனும், அப்பயனை ஊட்டுவிப்பானும் உண்டென வுணர்.

ஊன் உயிரின் சம்பந்தத்தால் வாழ்கின்ற தன்மையை யுடையது. அதுபோல, ஊனொடுகூட உயிர் இறைவனோடு ஒற்றுமைப் படுதலால் வாழுந் தரத்தது.

பழமையான தனது நிறத்தையும் தன்னைச் சார்ந்த பல நிறத்தையும் பெற்றுத் திகழ்வதற்குக் கதிரவன் கதிர்கள் காரணமாதல்போல, இறைவனது அறிவாற்றல் உயிர் தத்துவங்களிற் கட்டுப்படுதற்கும் அவற்றின் நீங்கி விடுதற்குங் காரணமாமென உய்த்துணர்க.

கண்ணிலே ஒளி இல்லாதபோதுங் கதிரவனொளி பொருந்திக் காட்டிய பொருளைக் கண் காணுமைபோல, இறைவனது அறிவாற்றல் எங்கும் விளங்கினும், அது உயிரினுள்ளாகக் கலந்து நின்றாலன்றி ஒன்றையும் உயிர் அறிய மாட்டாது.

உயிரின் சிறு செயலாற்றல் வழி ஐம்புலன்கள் தொழிற் படுதல் போல, உயிராகிய நினது செயலையும் இறைவன் செயல்வழி நிற்பதெனக் கருதுவாயாக.

இறை ஞானத்தைச் சிற்றறிவால் ஆராயாமலும் அதனைச் சுட்டியறிய முயலாமலும், உன் செயலாலே அதனை

முற்பட்டுப் பார்க்கத் துணியாமலும், இறையருள் காட்டு-டைத அதன் வழி நின்று காண்பாயாக.

இறை ஞானத்தாற் பெறற்பாலதாய பேரின்ப மௌன நிலையை நீ நாட விரும்பி, உன்னறிவு மேலோங்காது அப் பேரறிவே விளங்கும் வண்ணம் அதன்கண் அடங்குக.

இறைஞானம் உனக்கு வெளிப்பட்ட முறையிலேயே நீ அதனை அகண்டமாகக் கண்டு அறியாமையிலே புகாது, அப் பேரறிவு உன்னை விழுங்கியபடியே, அதனுட் பட்டு விளங்குக.

## 7. உயிர் விளக்கம்

இதனையே ஆன்ம சுத்தியென்பர். முன் அதிகாரத்தில், ஆன்ம தரிசனங் கூறப்பட்டது.

வெயிலிற் சென்றோனுக்கு மரத்தின் தூய நிழலையடைய வேண்டுமென ஒருவருஞ் சொல்லவேண்டியதில்லை. அவனே அதனைச் சென்றடைவான். உலக பாசத்தை வெறுத்தவன் திருவருணிழலையடைதற்கு விரும்பிச் சென்று அதுவாய் நிற்கு முறை அது போல்வதாகும்.

பித்தங் கொண்ட நாவிற்குப் பால் கைக்கும், அதனைத் தவிர்த்தபின், பால் தித்திக்கும். மலப்பிணிப்புள்ள காலை, மறைப்பாய் நின்ற இறைவனதாற்றல், மலம் நீங்கிய காலை இனிய அருளாய் விளங்கும்.

மலவிருளிற் கிடக்கும்போது உயிர்க்குப் பொருள்களை இறைஞானம் அறிவிக்கவும், அதனையறியாது உயிர் தானாக எல்லாவற்றையும் அறிவதாக வீணாக எண்ணிக் கொண்டிருக் கிற எண்ணம் எப்போது ஒழியும்?

வேறு பொருளாய் நிற்பின், இவை நுகர்ச்சியொடு பேச்சிற் கிடமில்லை. ஆதலின், ஒருமைப்பட்டுக் கலப்பதால், இரண்டறுநிலை புகுதியென்றறிக.

ஞான நிட்டை யுடையாரும், தெளிவுடையாரும், கேட்டல், சிந்தித்தலுடையாரும் பிறவியற்றவராவர்.

பேய்ப் பிடிபோல, இறைவனது தொடர்பு உனக்குண்டாம் வரை, நீ ஒன்றும் உன்னுணர்ச்சியாற் செய்யாது நிற்பாயாக. பின்னர், உன் செயல் இறை செயலாகுமென்க.

மெய்ப் பொருளாம் முதல்வனை நிட்டையாலுறுபவர்கள் பேரின்பமாம் பயனை உறுபவராவர். நிட்டையுடையார்க்குப் பிற செயல் எல்லாம் தூங்குவார் கைப் பொருள் போலத் தாமே அவரைவிட்டகன்றொழியும்.

உயிரு முதல்வனுந் தம்மில் நெருங்கிக் கலப்புற்றமை யால், காண்பான், காட்சி, காண்பொருள் என்னு முந்நிலைமை தோன்றாத இன்ப நிலையே உயர்நிலை. அந்நிலைச் சொல்லால் எவ்வாறு கூறமுடியும்?

எல்லா இன்பங்களினுமேலாய இன்பமாய வீட்டின்ப முண்டாக வேண்டுமாயின், மருவாய பேரன்பு நிலை வாய்ப்பட்டால் அந்த இன்பநிலை அதுவேயாய் அப்போதே தோன்றும்.

## 9. ஐந்தெழுத் தருணிலை—ஐந்தெழுத்தோதிப் பெருந் திருவருள் நிலை

சிறப்பாய சிவநூலும், பொதுவாகிய மறை நூலும் அவற்றைச் சார்ந்த பிறவும், முடிவாகத் திருவைந்தெழுத் தின் பொருண் முறையையே தெரிவிக்க ஏற்பட்டன.

ஓங்காரத்தான், சிவம், சத்தி, இருண் மலம், சுத்த மாயை, உயிர், என்ற ஐந்தும் பொருந்தி நிற்கும்.

சிவாயநம என்ற திருவைந் தெழுத்தால், உயிர்க்கு ஒருபுறம் இறைவனது ஊன நடனத்தைக் குறிக்கும் நகர மகரங்களும் மறுபுறம் அவனது ஞான நடனத்தைக் குறிக்கும் சிகர வகரங்களும், நடுவே, உயிரைக் குறிக்கும் யகரமும் உளவென அறிக.

மகரமும் நகரமும், உலகிலே பரந்து செல்லும்படி உயிரைச் செலுத்தி, அப்பாசத் போக்கினின்று உயிரைத் திரும்ப விடமாட்டா. அதனையே பெரிய பிணிப்பு நீங்கப் பெற்று உயிர் சிவத்தை யடையும்.

மறைப்புச் சத்தியைக் குறிக்கும் நகரத்தையும், மலத்தைக் குறிக்கும் மகரத்தையும், முதலாக வைத்துத் திருவைந்தெழுத்தை யோதின், பிறவி நீங்குமோ? மாறிச் சிகரத்தையும் வகரத்தையும் முதலில் வைத்தோதாவிடின், அது நீங்காது.

ஆதாரங்கள் ஆறின முறைக்கேற்ப நகரமகரங்களை முதலிலே வைத்தோதுவதால் பிறவியுளதாமென்பதைக் கருதாது, உலகப் பற்றுடைய உள்ளமானது அவ்வாறோதும்.

சிகர வகர முதலாக ஓதின், பிறவி நீங்கும், வீடுபேற் றினைக் கருதிய நீ ஓதவேண்டிய முறை அதுவே.

வகரமானது சிவத்தைக் காட்டி உயிரை உய்விக்கும். அது அருட் சத்தியாதலின், குற்றமற்ற இறைவர் திருமேனி யுமாமென்றறிக.

நிகழ்வதாகாது. இந்த அவத்தைகளைத் திருவருளினால் அறியலாமேயன்றித் திருவருள் அவற்றைப் பொருந்தா ஆதலின் கடாகம் பொருந்திய திருமருதூர்ச் சபாபதீ! அடியேன் அவத்தைகளினியல்பைக் கண்டறிவதெப்படி யென்றறிவுறுத்துக.

திருமருதூர்ச் சம்பந்த மாமுனியே! எனது சிற்றறி வைக்கொண்டு அறியப்பட்டன வெல்லாம், நிலையாதவை யென்னில் அவை உனது பேரறிவிற் பொருந்தா. பொறிகள், புலன் கள் எனப்படுகின்ற தத்துவங்கள் தாமே ஒன்றையுமறிய மாட்டா. அங்ஙனமாயினை யாம் பொருள்களினுண்மையை அறிதல் கூடுமா? உயிர்களாகிய யாமே அறிதல் கூடுமேனில், யாம் யார்?

உயிரின் சிற்றறிவு முன்னே யொழிந்தே பேரறி வுடைய மென்னில், சிற்றறிவு சிதையுமே அதனையுடைய உயிருமே இலதாகும். ஆதலே பேரறிவைப் பெறுவாரிலை யென்பது முடியும். சிற்றறிவு நிலைபெறுமாயின் திருவருள் பொருந்தாது. மின்னுங் கார்மேகம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த அகன்ற இடத்தையுடைய திருமருதூர்ச் சம்பந்த மாமுனியே! யான் எதனைக்கொண்டு மெய்யினைக் காண்பேன்?

கடமருதச் சம்பந்த மாமுனியே! நினைதற்கரிய உன் னுடைய பேரறிவு மேற்பட்டு விளங்கிய விடத்தே மாயா கருவிகளைப் பொருந்தி யறிதல் அரிதாகும். என்னுடைய பாசஞானத்தினால் உண்மை யறியமுடியாது. அவ்வாறாயின் எப்படி அடியேன் அதனை யறிதல் கூடுமா?

அருவம் உருவமாகாது உருவம் அருவமாகாது. அருவும் உருவும் ஒரு பொருட்கண்ணே பொருந்த மாட்டா. உயர்ந்த

மெய்கண்ட நூல்கள்

# சிவஞான சித்தியார்

(பரபககம்)

# சிவஞான சித்தியார்

## பரபக்கம்

---

*இந்நூல் பாயிரத்துள் கணபதி காப்பும், சிவன், சக்தி, விநாயகர், முருகர், என்னுங் கடவுளர்க்குரிய துதியும் இயம்பிய பின்னர், ஆசிரியர் அருணந்தி சிவம் மெய்கண்டதேவ நாயனார்க்கு வணக்கங் கூறுகின்றார். அது வருமாறு:—*

பண்டைமறை வண்டு அரற்றப்பசுந்தேன் ஞானம்
　　பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇருதய கமலமுகைகளெல்லாங் கண்திறப்பக்
　　காசினிமேல் வந்த அருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில் புடைசூழ் வெண்ணெய்மேவு
　　மெய்கண்டதேவன் மிகுசைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தேவாழும் பொற்பாதம்
　　எப்போதும் போற்றல் செய்வாம்.

---

*பழைய மறைகளாகிய வண்டுகள் ஒலிக்க, புதியதேனாகிய சிவஞானம் ததும்பி யொழுகச் சிவமணம் விரிந்து கமழ உயிர்களின் அகத்தாமரை மொட்டுக்களெல்லாம் மலரும்படி-யாக இவ்வுலகின்மேல் உதித்த அருட்கதிரவன் யாரெனில், திருவெண்ணெய் நல்லூரிலெழுந்தருளிய மெய்கண்டதேவ ரென்னுஞ் சித்தாந்தத் தலைவரே. கமலத்தையும் அழகில் வென்ற அவரது திருவடிமலர்கள் எமது சென்னியில் எப்பொழுதும் வாழ்க. அவற்றைப் போற்றித் துதிப்போமாக. என்றவாறு.*

அவையடக்கங் கூறிய ஆசிரியர் தமது நூலுக்கு முதல் நூல் யாதென்று கூறாவிட்டது, அவர் நமக்கறிவுறுத்தும் வரலாறு உற்று நோக்கத்தக்கது. மிகுந்த நல்லறிவும் அறியாமையும் இலராய் நடுத்தரமுடைய மறியோர் வினவும் நடுத்தரத்தினர் அறியும்பாலனவாய உண்மைகளை முற்காலத்திலே இறைவன் நந்தி பெருமானுக்கருளப், நந்தி பெருமான் தாங்கேட்டதைத் தமது மாணாக்கராகிய சனற் குமாரர்க்குக் கூற அவ்வழியைக் கடைப்பிடித்து வந்த குருநாதன் குற்றம் நீங்க எமக்குக் கூறிய சிவஞான போதத்தின் பொருளைத் தெரித்தற் சிவஞான சித்தியென்னு நூலையுரைப்பன் என்றது காண்க. ஈண்டு இறைவனை சிவஞான போத நூலினை இரௌரவாகமத்தினின் றெடுத்துக் காட்டினதாக ஆசிரியர் இயம்பாமை காண்க.

இந்நூலுள் முதற்கண் விரிக்கப்படும் பரபக்கமாய சமயம் உலகாயதக் கொள்கையாகும். உலகாயதமதமென்பது இந்நிலவுலகில் எப்போது தோன்றியதென்று நன்கு விளங்கவில்லை. கி. பி. மூன்றாம் நூற்றாண்டிலேயே மணிவாசகனார் உலகாயதத்தைத் தமது நூலுட் குறித்தனர். 'உலகாயதமெனும் ஒண்டிறற் பாம்பின் கலாபேதத்த கடுவிடமெய்தி' என்றமை காண்க. கி. பி. 2வது நூற்றாண்டு நூலாகிய மணிமேகலையுள் 'பூதவாதி' யென்பாரும், உலகாயதரே போலும். புத்தர் பூதவாதி கொள்கையைக் கடிந்தாராதலின், புத்த சமயந்தோன்று முன்னரே உலகாயதந் தோன்றிய தென்பாருமுளர். உலகாயதன் எனப்பெறுவான், வியாழ பகவான் விண்ணவர் கோமானுக்குச் சூழ்ச்சியாக உரைத்த நாத்திகநூலினை மெய்யெனக்கொண்டு, நாத்திக மதத்தை உலகிற் பரப்பினனென்று சித்தியார் கூறுகின்றது.

தேவகுருவின நூல் இந்நிலவுலகத்தே எவ்வாறு எக்காலத்தே உலகாயதன் அறிவிற்குப் புலனாயிற்றென்பது விளங்கவில்லை.

உலகாயதன் கொள்கை வருமாறு:- பொருள்களை யறிவதற்குக் காட்சியே கருவி. அக்காட்சியானது, ஐயக்காட்சி, வாயிற்காட்சி, விகற்பக்காட்சி, பூர்வக்காட்சி, திரிவுகாட்சி, எதிர்மறைக்காட்சியென அறுவகைப்படும். கயிற்றை அரவோ வென்றையுறுதல் ஐயக்காட்சி. இதனை மனக்காட்சியெனவுங் கூறுப. பொறிகளாற் பொருள்களை யறிதல், வாயிற்காட்சி. பொருள்களின் பெயர், இடம், குணம், தொழில், பயன் என்பவற்றை யறிதல் விகற்பக்காட்சி. புகையால் அனலுண்டென்றறிவது பூர்வக்காட்சி. கயிற்றை அரவாகக் கருதுதல் திரிவுகாட்சி. குளிர்ச்சியிருப்பதால், தீ இல்லையென்றறிதல் எதிர்மறைக்காட்சி.

காட்சியின் வேறாக உரை, கருதல் என்னும் அளவைகள் பொருளாராய்ச்சிக்கு வேண்டப்படாதன. காட்சியாலறிந்தபொருள்கள் நிலம், நீர், தீ, காற்று என்னும் நான்கே. நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்யது, காற்று இயங்குவது. காற்றினைத் துணையாகக் கொண்டு பிறமூன்று பூதங்களும் தம்மிற் கூடும். அப்படிக் கூடுவதால், நாற்றம், சுவை, ஒளி, ஊறு எனனுங் குணங்கள் உண்டாகின்றன. மண்ணினின்று பல்வகைப் பாத்திரங்கள் உண்டாதல்போல, இப்பூதங்கள் தம்மிலொத்துக் கூடும் புணர்ப்பினால், பல்வகை உருவுகள் தோன்றும். நீரிற்குமிழி யெழுவதுபோல, அவ்வுருவுகளிலே, பூதம், குணம், பொறி முதலிய எல்லாம் எழும். பூதக்கூட்டத்தினின்று நாலாவதாகிய காற்றுப் பிரியவே அறிவு மாளும். பின பிறபூதங்களும் பிரிந்து விலகித் தாந்தம் குணங்களோடுந் தனி நிலையடையும். ஆகவே, நால்

இச்செயல்கள் நீரின் றன்மையே. அதனால், நெருப்பைக் கண்டாற் சுருண்டிடும், நீர் சேர்ந்தவிடத்து நெகிழ்ந்து மிருந்த தல் அப்பொருளியல்பினாலே நாடும். யாவும் பதார்த்த வியல்பாலன்றி, வினையால் நிகழ்வனவல்ல.

உயிரென்பது உடலின் வேறாக யாதுமில்லை. பாக்குஞ் சுண்ணமும் வெற்றிலையும் விரவியகாலை, முன்னரில்லாத சிவப்பொன்று உண்டானதுபோல, பூதப் புணர்ப்பால் உடம்பு உண்டாயபோது, அதன் குணமொன்று அறிவென்பதாகும். உடம்பின் வேறாய உயிர் எவ்வகைத்தாய காட்சிக்கும் புலனாவதில்லை. ஆதலின், அத்தகைய உயிரினைப்பற்றி விரித்துரைத்தல், முயற்கொம்பிருப்பதாகக் கூறி அக்கொம்பின் அளவினையும் வடிவினையும் பற்றிப் பேசுவதுபோலாம்.

உடம்பின் குணமாக அறிவுண்டாவதால், கடவுளென்றொரு பொருள் அருவாயிருப்பதென்றால், அது அறிவிலதாய் ஆகாயம் போலச் சடப்பொருள் என்பது முடியும். அது உருவுடைத்தென்னில், பூதக் கூட்டத்திலாய பொருள்களுள் அது ஒன்றாகவேண்டும். அருவுருவென்னில் அருவாகிய வானிலெறிந்த உருவுடைய கல் நில்லாமை போல அருவமு முருவமுங் கூடிநில்லா. ஆதலாற் கடவுள் உடம்போடுள்ள உயிரின் வேறாக உள்ள பொருளன்று. பூதக் கலப்பால், உணர்வுண்டாகி உடம்பின் விருத்தியாற் புத்தியுண்டாம். புத்தியிலே சஞ்சலமுற்ற மனம் உண்டாய், உடம்பு, புத்தி, மனமென வெவ்வேறு பொருள்கள் உளவாயினவென்று உலகாயத வேதங் கூறவும், உலகத்தார் அவ்வேத வுண்மை உணராது வழியல்லா வழி வீழ்ந்து துன்பப் படுதல் எதனாலோ? இவ்வுலகிலே உள்ள போகத்தைக் கைவிட்டு விண்ணுலகிற் போய்ப் பிறிதொரு பிறவி

யிற் பெறும் போகம் பெறலாமென்று நம்பி யொழுகுவது தாகம் எழுந்தபோது அருகிலுள்ள நீர் நிலையிலுள்ள நல்ல தண்ணீரைப் பருகாமல், ஒருவன் நெடுந்தூரத்திற் கப்பால் தீம்புனல் உண்டென்று கூறுவதைக் கேட்டுச் சேய்மையிற் போயொருவனுங் காணாது வருந்துவதுபோலாம்.

வாம மதத்திலே, கள்ளும் ஊனும் முன்று போகங்களை நுகர்வது பேசப்படுதலின், அம்மதவாதியை நோக்கி உலகாயதன் தனக்கு வலக்கை தருமபடி அழைக்கிறான். "என் உயிர்க்குத் தோழன் உன்போல்வார் யாருமில்லை. கொங்கை முதலியவற்றிற் கஞ்சாத பெண்டிர் நடுவே சோதிபோல் விளங்கு மன்பனாகிய நீயே சிறந்தவன். அரன், மால், அயன், இந்திரன், என்ற தேவர்கள் மாதரை விழைந்து அவர் விரும்பின செய்தன்றோ மேன்மையுடையரானார். அவர்போல நாமும் பெரியராகவேண்டுமாயின், பெண்டிரோடு கலந்து வாழவேண்டும். ஊடியும் கூடியும் உறுவன செய்தார், மகளிரை மகிழ்வித்துத் தாமும் மகிழ்ச்சி யெய்தாத மாந்தர், பொய்ந்நெறி புகுந் தொழிகின்றனராவர். மெல்லியலார் போகத்திற் றலைசிறந்தவரே மெய்யான முத்திப் பேரின்ப முடையார். அதற்கு வேறாக, முத்தி யென்பதொன்றைக் கண்டாரும், கேட்டாரும், காட்டினாரும் இல்லை." நாட்டிலே அரசன் ஆணைக்கு அடங்கி நடந்து, வாணிகம், உழவு, கைத்தொழில் முதலியவற்றைப் பேணிப் பொருளீட்டி மகளிர் இன்பந்துய்ப்பதே உலகவர் கடமையாகும். ஆதலின் அதனை யாவரும் நன்றாக. இஃதே உலகாயத முடிவு.

## உலகாயத மத மறுப்பு.

காட்சி யளவையே பிரமாணம். கருதல், உரை முதலி யன வேண்டாவென்னில், கருதலளவை அனுபவத்தில்

யார்க்கு முளதாகும். ஒருவனை பிறந்தவுடன், அவனது பெற்றோர் இறந்தொழிந்தால், அவன் அறிவு நிகழப்பெற்றபின் தனக்குப் பெற்றோர் இருந்தன ரென்றறிதல் கருதலளவை யன்றோ?

பூர்வக் காட்சி யென்பது அனுமானத்தின் சார்புடையதே. மேகம் இருந்து மின்னி யிருண்டபோது மழை பெய்யுமென்று நினைப்புண்டாவதூஉம், அதில், சந்தன முதலிய மலைப் பொருள்களை ஆற்று வெள்ளம் கொண்டுவரப் பார்த்தபோது, மலையில் மழை பெய்ததெனது துணிதலும், கருதலன்றோ? பூதங்கள் சேர்ந்து இவ்வுடம்பு உண்டாவதைப் பார்த்தவர் யார்? பூதக்கூட்டத்தினாலே உடம்பினுள் அறிவுண்டாவதைப் பார்த்தவர் யார்? பூதங்களாகிய உருவுகளைப் பார்க்கிறோமே யொழியக் காரண நிலையாய தனி நிலையிலுள்ள பூதங்களைப் பார்த்தவர் யார்? பூதங்கள் அறிவில்லாதன வென்று கூறுவது எதனால்? அனுமானத்தினாலன்றோ? ஆதலாற் கருதலளவை உலகாயதக் கொள்கைக்குந் துணை செய்வதால், காட்சியளவை மட்டுமே பிரமாண மென்றல் தவறு.

இனி, உரையளவையும் பொருளாராய்ச்சிக்கு வேண்டப்படுமென்பது சிறிது காட்டுதும். சோதிட நூலோர் எதிர்காலத்து நிகழ்வதைத் தவறுமற் சிறுபான்மையாவது சொல்லுவது என்னை? நூல் வாயிலாகப் பூமியின் மறைந்து கிடக்கும் பொருள்கள் எடுக்கப்படுகின்றன. மணிகளை அகழ்ந்தெடுத்தல் முதலியன நூலின் உதவிகொண்டு நிகழ்கின்றனவே. முன்னேரே நாம் பார்த்ததைச் சிலர் பார்த்தெழுதியதே உரையென்னில், அவ்வாறே நாம் பாராத புராணங்களையும் பொருள்களையும் அறிந்தெழுதியனவே, உரைப் பிரமாணமாதலின், அதுபற்றி மாறுபாடு யாதுளது? எவ்வாறி

லாவது உரையைக் கொள்ளலாமாயின், அது வேண்டா மென்பது தவறன்றோ?

இனி, மண்ணில் நின்று குடம் முதலியன தாமாகத் தோன்றக் காணவில்லை. அவை குயவனாலே உண்டாக்கப்படு கின்றன. அதுபோலப் பூத வடிவங்களும் தோன்றுவது ஒரு முதல்வனாலாதல் வேண்டும். அது இயற்கையெனின், அதற்கு மறுதலையாய ஒடுக்கமுங் காணப்படுதலின், இரு வேறு செயல்கள் இயற்கையாகாவாதலின், முதல்வன் அவற் றைத் தோற்றுவிக்கவும் ஒடுக்கவும் வேண்டும். பூதங்கள் தாமே தம்மிற் கூடுதற்கு இடமில்லை. ஏனென்றால், அவை ஒன்றோடொன்று மாறுபாடுடையன. நீருந் நெருப்பும் ஒட்டிக் கூடி நின்றதை யாராவது பார்த்ததுண்டா? அவற் றைக் கூட்டு முறைமையால் அறிவுடைய ஒருவன் கூட்டி னாலன்றி அவை தாமே முரண்பாடின்றிக் கூடா. நிலமுதல் பழவுடையதாகலின், அது முதற்கணுட் அதற்குமேலே அதைவிட எளிதான நீரும், அதற்குமேல் நெருப்பும், நான்காவதாக வாயுவுங் கூடும். நீரும் நெருப்பும் முரண் பட்டு ஒன்றை மற்றொன்று அழித்துவிடும். நீரிற்கும் நெருப்பிற்கும் நடுவே மண் தானே போய் நின்றுவிடாது. நீரை அனலாற் கொதிப்பிக்க விரும்புகிறவன், மண்ணலாய பானையில் நீரை ஊற்றி அனல் மேலே பானையை வைத்தா லன்றி, இரண்டு பூதமும் பயனுறும் வழியிற் றொழிற்படா. அதுபோலப் பூதக் கூட்டத்தாற் பொருள்களாதற்குத் தக்க முறையில் அவற்றைச் சேர்ப்பிக்குங் கடவுள் ஒருவன் வேண்டுமென்றறிக.

நீரிற்குமிழி எழுவது காற்றினால். நீரிலெழுங்குமிழி நீர்தல்போலப் பூதங்களிற் றோன்றுவது பூதமாமேயன்றி

அறியாகாது. அறிவென்பது பூதகுணமே என்னில், மண், நீர், அனல், காற்று இவைகளிலே அறிவு காணப்படவில்லையே. இவற்றின் கலப்பிலே அறிவு காணப்படுமென்னில், அவை கலப்புற்றிருக்கும் பிணத்திலே அறிவு ஏன் காணப்படவில்லை? காற்று பிரிந்துபோவதால், அறிவு தோன்றவில்லையெனில், அது பிரியாது நிற்கும் உறக்கத்திலே அறிவு விளங்காமைக் கேதுவென்னை? வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு மூன்றுங் கூடிய விடத்துண்டாகிய சிவப்பு நிறம், அம்மூன்றின் கலவையை விட்டுப் பிரிதல் இல்லை. உடம்பெழும் அறிவு மறைந்தொழிய, உடம்பு கிடக்கக்காண்கின்றோமே. அறிவு உடம்பின் குணமேயானால், அது உடம்பு உருமாறியழியுமளவும் அதனை விட்டுப் பிரியாதிருத்தல் வேண்டும். அறிவு பிரிந்த பின்னன்றோ உடம்பு அழிகின்றது. மேலும், வெற்றிலைக் கலவைக்குச் சிவப்பு நிறம் ஒருபடித்தாயது. உடம்பிலே வெவ்வேறு பொறிகளும், பண்புகளும், செயல்களும் தோன்றுகின்றனவே. அவை எவ்வாறு தோன்றின? அவையனைத்தும், உடம்பின் குணமோ? சிவப்பு நிற முண்டாகப் பொருட்டு வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு என்ற மூன்றையும் ஒருவன் சேர்த்து இயற்றியமைப்பானைப்போல், பூதங்களைக் கூட்டித் தொழிற்படுத்துதற்கும் ஒருவன் வேண்டுமென்றறிக.

அறிவு, உடலின் குணமெனின், பெரிய உடலுக்கு அறிவு பெரிதாயும் சிறிய உடலுக்கு அறிவு சிறியதாயுமிருக்கும். பெரிய உடலுடைய யானையைப் பார்க்கிலும் சிறிய உடலுடைய மனிதன் அறிவு மிகுதிப்பட்டவனாயிருப்பது எதனால்? அறிவு நூல்போலப் பயிலப்படுவதெனில், எறும்பிற்கு அறிவு மிகுந்தும், யானைக்கு அறிவு குறைந்துமிருக்கிறதா?

டின் அன்மையும், வேண்டிய காலத்திலே பொய்மையினை நட்பாகும்போல நிலைபெற வியல்பின. நிலைத்த சிவனாப் பேரின்பம் விழைக. அதற்குரிய நெறியை யடைக. கற்றற்குரிய சிவ நூல்களைக் கற்க. செயத்தக்கது, இறைவழிபாடே. விடுத்தற்குரியன காமம், வெகுளி, மயக்கங்கள். வேண்டும் பொருள் திருவருளே. மும்மலம் நீத்து நின்மலனோடு நின்றிடல் முத்தியெனவோர்க.

## புத்த சமயம்.

புத்த சமயத்தின் பிரிவுகள் நான்கெனச் சிவஞான சித்தியார் செப்பும். அவை, சௌத்திராந்திகர், யோகாசாரர், மாத்தியமிகர், வைபாடிகர், என்போர் கொள்கைகளே. வடநாட்டிலே 'பெருவழி' (மகாயானம்) 'சிறுவழி' (ஈனயானம்) என்று இருபிரிவுகள் கேட்கப்படுகின்றன. ஈனயானமே தென்னாட்டிற் பரவியது போலும், அதன் கொள்கைகள் சௌத்திராந்திக மதத்தோடு காணப்படுவன போலும். 'பெருவழி' என்பதிலே சாத்தேயமதக் கொள்கைகளோடு வேறு கருத்துக்களும் கலந்துள்ளன.

ஆதிபுத்தராகிய சமயத்தலைவர், தாம் மாணவர்கட்குச் சில அறவுரை பகர்ந்தனரேயொழிய நூலும் எழுதியதாகத் தெரியவில்லை. அவர்க்குப்பின் வந்தோர் சங்கங்கள் கூட்டித் தொகுத்தமைத்துக்கொண்ட நூலே திரிபிடகமெனப்படுவது. பிடகமென்னுஞ் சொல் பெட்டியென்னும் பொருளுடையது. மூன்று தொகுதிகளாகப் பகுத்து சமய நூலை அமைத்துக் கொண்டமையால் அப்பெயர் எழுந்தது போலும்.

யிலே நடந்து வருவதை வைத்திட்டுப்பிய, அவ்வாறுவதைக் காண்பது சித்தம். ஒன்று கொண்டு அல்லது தீ தெரியப்பெற்றுத் தோன்றுவது வினை. குற்றவிடைபடு குற்றங்கட்கேதுவாய காமம் வெகுளி மயக்கத்தை விடுதல். கந்த வீடுபேறாவது உளவாய்க் காணப்படும் உருவக்கந்தம், குறிக்கந்தம், அறிவுக் கந்தம், வேதனைக் கந்தம், வாசனைக்கந்தமென்ற ஐந்து கந்தங் களும் அழிந்தொழியப் பெறுதல். கந்தமென்ற சொல் கூட்ட மென்னும் பொருளுடையது, உருவக் கந்தம், அங்கங்கே காணப்படும் பொருள்களில் உருவக்கூட்டம். அதனையறி யும் அறிவு ஞானக்கந்தம்; அவ்வறிவாற் றோன்றும் இன்ப துன்பங்கள் வேதனைக்கந்தம்; பொருள்களின் பெயர்த் தொகுதி குறிக்கந்தமெனப்படும். செய்கைகளின் தொகுதி வாசனைக்கந்தமெனப்படும்.

வழுக்கிரண்டும் தனித்தனியே தொகை, தொடர்ச்சி, பிருத்துவை யென மூவகைப்படும். பிருத்துவை யென்பது வேறுபாடுடைமை. ஒருவனை மனிதன் பேசப்படு வனை உருவக்கந்த முதலிய ஐந்து கந்தங்களா யுள்ளவன் என்று சொல்லுதல் தொகையுண்மை வழுக்கு. உருவமுத லிய ஐந்தையும் அவற்றினைச் சாராத ஒருவன் உண்டாக்குவா னென்றல் தொகையின்மை வழுக்கு. காரண காரியத் தொடர்ச்சியாய்ப் பொருள்கள் மாறிமாறி அழிந்து தோன்று வனவென்று கூறுதல் தொடர்ச்சியுண்மை வழுக்கு. ஒரு வனே முக்காலத்திலும் உளனென்று கூறுதல் தொடர்ச்சி யின்மை வழுக்கு. தோன்றிய பொருள்களெல்லாம் அழியு மென்று கூறுதல் பிருத்துவையுண்மை வழுக்கு. தோன்றி நிலவு பொருள்கள் காரிய வுருவங்கெட்டுக் காரணமாய் நிற் பனவென்று கூறுதல் பிருத்துவையின்மை வழுக்கு.

இன்னும் வழக்கென்பது உள் வழக்கு, இல்வழக்கு, உள்ளது சார்ந்த உள் வழக்கு, உள்ளது சார்ந்த இல்வழக்கு, இன்மை சார்ந்த உள்வழக்கு, இன்மை சார்ந்த இல்வழக்கு என அறுவகைப்படும். உள்ளதை உண்டென்றுரைப்பது உள்வழக்கு. இல்லதை யில்லையென்றல் இல்வழக்கு. யானைக்கு மருப்புண்டென்பது உள்வழக்கு. முயலுக்குக் கொம்பில்லையென்பது இல்வழக்கு. அறிவைச்சார்ந்து அறிவுண்டாமென்பது, உள்ளது சார்ந்த உள்வழக்கு. அறிவு கெட்டாற் பின் அறிவுண்டாகாது என்பது உள்ளது சார்ந்த இல்வழக்கு. அறிவு முன்பு இல்லாததாய்ப் பின் உண்டாமென்பது இல்லது சார்ந்த உள்வழக்கு. உள்ளங்கையில் உண்டாய மயிராற் கயிறு செய்யப்பட்டதென்பது இல்லது சார்ந்த இல்வழக்கு.

இங்கே கூறிய உரு, அரு, வீடு, வழக்கு என்பதற்கு வேறாக வான் என்று ஒரு பூதம் உண்டு, உயிர், காலம், திக்கு, கடவுள் என்பவை உள்ளன, என்றல் பிதற்றுரை.

மண் முதலிய நான்கு பூதங்களுந் தொழிற்படக் காணுகின்றேம். வானென்பது தொழிற்படுமாறில்லை. அது பூத நான்கினையும் தாங்குமென்னில், அது அருவமாதலாற் றாங்காது. அது ஒலி தோன்றுதற்கிடமென்னில், ஒலியென்பது உருவெடுத்த பொருள்களின் சேர்க்கையால் தோன்றுவதன்றி அவற்றின் வேறாகத் தோன்றுமாறில்லை. அது எங்கும் நிறைந்ததென்றால், அது எங்குமில்லையென்றுஞ் சொல்லலாம், அது இருப்பதைக் காட்டுவதுயாதுமின்மையின்.

அறிவுடைய பொருள் உயிரென்னில், ஐம்பொறி, ஐம்புலன், நூல் முதலியவற்றைக் கொண்டு அறிவானோ?

ஐம்பொறி வாயிலாக ஐம்புலன்களை யுணர்ந்தும், நலன்களைப் பொருந்தி நின்றும், உயிர் அறியுமென்னில், இலையிலே பசுமை யுஞ் சிகப்புங் கலந்து நிற்கும்போது, அவற்றின் வேறுபாட் டைத் துணிவாக அறியமுடியாமல் ஐயுற்று வருந்துவதில்லை: பொறிகளில்லையாயின், உயிர்கள் ஐயுறுதல் மறிந்திரா. பொறிகட்கறிவின்மைபோல, அவற்றைப்பற்றி நின்று உயிர் அறியுமென்னில், ஐம்பொறியும் ஒரு தன்மையான அறிவுடை பயிலவேண்டும். ஒவ்வொரு பொறிக்கும் புலனுந் தொழிலும் வேறு ஆதலின், அவற்றைச் சார்ந்து வெவ்வேறு புலன்களை உயிர் அறியுமென்னில், அது தானே புகுந்துங் கூறுவது. ஐம்புலனைச் சார்ந்து ஐவகை அறிவுண்டாமென்பது புத்தர் கொள்கை. அங்ஙனமாயின், அறிவுண்டென்பது பொருந் படுமே யொழிய, உயிர் என்பதொன்றுண்டெனக் கொள்ள இடமில்லை. அறிவும், அறியப்படு பொருளுமாகிய இரண் டின் வேறாக, அறியும் பொருளுண்டென்னில், அது தன் னியல்பில், அறிவுள்ளதா? அறிவில்லதா? அறிவில்லதாயின், மண்போற் சடமாம். அப்போது, புத்தர்களின் வேறாக உயிர் உண்டென்ன இடமில்லை. அறிவுள்ளதாயின், அறிவு தானே, அஃதாம். அறிவிற்கும் உயிர்க்கும் வேறுபாடியாது? பருப்பினாலமைந்த துணையுணவை எனினும், பருப்புக்கறி யென்றாலும் பொருளொன்றுதானே.

அறிவின் வேறுபிருப்பதாகக் கூறப்படும் உயிரெப்படி அருவப்பொருளா? உருவப்பொருளா? அது அருவமென்றால், உருவமாகிய உடம்போடு அது எவ்வாறு பொருந்தி நிற்கும்? உருவமாயின், ஓருருவம் மற்றோருருவிலடங்காது. உயிரினை அணுவென்று கூறின், அது எத்துணையோ துவாரங்களுள்ள உடம்பில் நில்லாது. உயிர் நித்தப் பொருள் எனறால் அறி

னும் நித்தியபொருளாக வேண்டும். அங்ஙனமாயின் அது தோற்றக்கேடில்லாததாக வேண்டும். அறிவு கணந்தோறு மாறுதலின், அது நித்தியமன்று, ஆதலால் உயிரும் நித்திய பொருளன்று. ஓருயிர் எங்கும் நிறைந்ததென்னில், உடல் தோறும் பல்வகையான வேற்றுமை காணப்படுதலின், ஓரு யிர் எல்லாவுடலினும் நிற்பதென்றல் பொருந்தாது. ஒவ் வொரு உயிரும் தத்தமுடன் முழுவதும் நிறைந்து நிற்ப தென்னில், உடல் கெடும்போது அதுவுங் கெட்டொழியும். உடம்பில் ஓரிடத்தில் அது நிற்பதென்னில் உடம்பிலே அடி முதல் முடிவரையுள்ளதை அது அறியமுடியாது. ஆத லால் அறிவென்பதே யுண்டு. அறியும் பொருளாய உயி ரென்பதில்லை.

காலமென்று கூறப்படுவதியாது? பொருள்கள் தோன்றி நின்றழிவதை வரையறைப்படுத்துவது காலம் என்றால், அது தோன்றும் பொருளொடும் நிற்கும் பொருளொடும் அழியும் பொருளொடுங் கலந்து நிற்பதாகும். பொருள் கெட்டால் கால மும் கெட்டொழியும். பொருளினியல்பு மூவகைத்தென்று கூறாது காலம் மூவகைத்தென்றல் தவறு. பொருளின் வேறாகக் காலங் காணப்படுமாறில்லை.

அவ்வாறே திசையுமாம். நீ எனக்குக் கிழக்கே இருந்தா யானால், என்னை மேற்கிலிருந்ததாக நீ கூறுவாய். எனக்கு மேற்கே யிருப்பவன் யானிருக்குமிடத்தைக் கிழக்கென்பான். நீ கூறிய கிழக்கையோ அவன் கூறிய மேற்கையோ இன்ன திசையென உறுதியாய்க் கூற முடியுமா? முடியாதாகலின், திசையென்பது ஒன்று தனியாக அறியப்படுமாறில்லை.

உலகத்தைப் படைத்தவன் ஒருவன் உண்டென்னில், இவ் வுலகம், முன்னுள்ளதோ? இல்லதோ? கூறவேண்டும். முன்

பூரணராயின் அதனைக் கடவுள் படைக்க வேண்டியதில்லை. இல்லையாயின் அதனைப் படைக்க முடியாது. உலகம் காரண நிலையில் நின்றதைக் காரியப்படுத்துவதே படைப்பெனனில், காரணநிலை யென்பது புலனாகாத நிலை. அது இல்லாய நிலை. ஒருபொருட்குக் காரணமென்று தோன்றா நிலையும், காரியமென்று தோன்றும் நிலையும் உண்டென்று கூறுதல், அது இல்லாயும் உளதாயு மிருப்பதென்று பகர்வதாகும். உளது மில்லதுமாய ஒருபொருள் உலகத்திலுண்டா?

மண்ணில் நின்று குடமுதலியவைகளைக் குயவன் உண்டாக்குவதுபோலக் கடவுள் உலகத்தை அதன் மூல காரணத்தினின்று படைத்தான் எனனில், அவன் எங்கே நின்று இவ்வுலகைப் படைத்தான்? உலகத்தினின்று அவன் படைத்தான் எனனில், அவன் படைப்பதன் முன் உலகம் உண்டென்பது போதரும். அவன் உலகின் புறம்பே எங்கும் நிறைந்து நின்று படைத்தான் எனனில், 'எங்கும்' என்ற சொல் இடத்தைக் குறிக்கும். அந்த இடம், முன்னே யிருப்பினே கடவுள் தோன்றினெனன்பது பொருந்தும். அந்த இடந்தானே மண்ணைப்போல உலகமுந்தானே யுண்டாயிற்று.

கடவுள் உருவுடையானெனனில், அவர் உருவை யார் படைத்தார்? அவன் விருப்பப்படி உருவங்கொண்டான் என்றால், உலகத்திலுள்ளோரும் அவர்கள் விருப்பப்படி உருவங்கொண்டாரென்று ஏன் கூறுதல் கூடாது? உயிர்களின் உருவுக்கு வினை காரணமெனனில், எல்லா உருவுக்கும் வினையே காரணமென்று, கடவுள் உருவுக்குக் காரணம் வேறு கூறுதல் பொருந்தாது.

கடவுள் அருவமாயிருப்பவன் எனனில், வான்போல அவனுக்குந் தொழிற்பாடு இல்லையென்பது முடியும். ஆகவே,

உயிர்களைப் பலக்கடல் நின்று அவன் எடுத்திடமாட்டான். அவன் நிழல்போலப் பயன்படுவன் எனனில், நிழல் தன்னடைந்தார்க் கின்பங் கொடுப்பதுபோல அவனைச் சென்றடைந்தார்க்கின்பமீவன, வியாபகமுடையனல்லன் என்பது முற்றும். அவன் பேரறிவுடையனாதலின், எல்லாம் அறிவன எனனின், அவன் உயிர்களுக்குற்றதையறிய அவன் உருவமுடையனாதல்வேண்டும். உருவமில்லையாயின் அறிதலுமில்லை. அது நூல்களாற் கடவுள் உண்டெனபதை அறிந்தோம் எனனில, அந்நூல்கள் அநாதியா? ஒருவனால் ஆக்கப்பட்டனவா? சொல்லுவாரின்றி நூல் உண்டா? சொன்னவன் கடவுள் என்னில, கடவுளையறிந்து அவன் சொன்னது நூலென்றறியப்பட்டதா? நூலினைக்கொண்டு கடவுள் உண்டென்றறியப்பட்டதா? பின்னது உண்மையின் கடவுள் நூலினுண்மை அறிவித்தானெனபது எவ்வாறு பொருந்தும்? பொருந்தாமையின் கடவுளுண்மைக்கு நூல் ஆதாரமாகாது.

உடம்பிற்கு நகம், கொப்பு, மயிர் முதலியன உண்டாதல்போலப் பூமியின்கண் புல், செடி, கொடி, மரமுதலியன உண்டாகின்றன, உண்டாய்க்கெடுகின்றன. இவை பூதவடிவங்களேயன்றி உயிருள்ளனவல்ல. மற்றைய பிறப்பு வகைகட்கு இவை பயன்படுகின்றன.

ஓருயிரைக்கொல்லுதல் பாவம். ஒருவன் கொன்றதனை மற்றொருவன் தின்றால், தின்றவனுக்குப் பாவம் இல்லை. செத்தவையெல்லாம் மண்ணோடொத்த இயல்புடையன. நறுமணநீர்ப்பந்தர் வைத்தவனுக்கோ அந்நீரைப் பருகினவனுக்கோ, புண்ணியம்? அது வைத்தவனுக்கேயாம். அது

போல, உயிரைக்கொன்றவனுக்கே பாவம். கொன்றதைத் தின்பவனுக்குப் பாவமில்லை.

உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்ற ஐந்து கந்தமும் காரணகாரியத் தொடர்ச்சியாய்க் கெட்டுத் தோன்றுவன. அவை பிறப்பிற்குக் காரணமாய்க் கட்டுக்களாம். அவற்றால் துன்பமுண்டாம். அவை ஒருங்கே கெட் டொழிந்துபோதல் வீட்டின்பமாம்.

காமம், வெகுளி முதலிய தீக்குணங்களை அகற்றி நல்லறங்களை யினிது முற்றிலும் ஆற்றி, ஐம்பொறியடக்க முடையனாய் இன்பதுன்பசமரசநிலையை யெய்தும் குற்ற மற்ற நல்வாழ்க்கைக்குரிய எண்படிகளையும் பயின்று, அவற்றிற்கு மாறானவை யெல்லாம் ஒழித்திடின் நிர்வாண நிலையே உறுதியான பதமெனப்படும். எண்படிகளாவன:- நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல் வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லூக்கத்தொடு தலைப் பாடு என்பன.

---

## சௌத்திராந்திகன் மதமறுப்பு.

---

புத்தனே! உருவெடுத்து ஓரிடத்து வாழ்ந்தவன் கடவுள் அளவில்லாததாகிய உலகமுழுவதையும் எவ்வாறு அறிதல் கூடும்? ஒவ்வொன்றாக எல்லாவற்றையும் உணர்ந்தான் என்பா யாயின், அவ்வாறறியுமிடத்து ஒவ்வொன்றின் தோற்றத் தையும் அழிவையும் பிறவற்றோடுள்ள தொடர்பையுமறிய வேண்டும். அப்படியறிதல் முழுதுமாய உலகத்தினை அறிந்த தாகாது. அது சுட்டறிவாலறியுமுறையாமன்றிச் சுட்டிறந்த

அறிவானறியுமறிவாகாது. உலகருவினுடைய அறிவு அவ விழ்ந்ததெனையாயினை, காணுந்தோறுந் தோன்றியழியுமறிவு அத்தகையதாகாது. ஏனெனில் அழியுமறிவு என்றும் நிலை பெறாது ஒருகாலத்திலேனும் தோன்றுதலும் அழிதலு முடையது.

இனி ஒருவன் உலகிலுள்ள சில பொருள்களை யறிந்து அவற்றோடொப்பப் பல பொருள்களையும் அறிந்தவனெ னின் முன்னுடைய பல்வேறு பொருள்களும் உலகிற் காணப் படுவதாலும் அனைய பொருள்களும் எண்ணிறந்தனவாத லாலும் சிலவற்றை வைத்துப் பலவற்றையறிதல் யாங் ஙனம்? ஒரு பொருளையறிய மிகுந்த அதனையுற்று நோக்கிச் சிந்தித்துத் தெளிதல் வேண்டும். ஆதலால் அறிவே பல பகுதிப்படும். அப்பல பகுதிகளையுந் தொகுத்து ஒன்றை அறிவதற்கு நீ சொல்லுங் கணபங்க வாதம் இடம்பாடு விளக்கும். ஏனென்றால் ஒரு பகுதி தோன்றுமுன் அதற்கு முந்திய பகுதி அழிந்துபோம். ஒரு பொருளை அறிந்த அறிவை மற்றப் பொருளை அறிந்த அறிவோடு சேர்த்துணர்தற்கு இடமில்லை.

வீட்டியல்பினை யறிந்து உன் கடவுள் நூலினைக் கூறின னென்றால், அறிவு கெட்ட பின்னரே முத்தி கைகூடும். அது கெட்டு முக்தியுற்றவன், பினனும் வந்து தோன்றி அறநூல் இயற்றினனென்பது தேனும் நெய்யுந் தவறாக் கூட்டியுண்டிறந்தவனை, மீண்டுவந்து, அக்கலவை நீ தந் தாரைத் தானென்பதோடொக்கும். அற முதலியவற்றைக் கூறியபின் முத்தியுற்றானென்னில், முத்தியினியல்பறியாது நூல் கூறினானவன். அத்தகையவன் முத்தி நூல் கூறு தல் அற்றுவிளக்கினவையறியாதா னொருவன் இக்கரையி

இளமானை அக்கரைக்குச் செலுத்துவேனென்று ஆற்றைப் படுதல் போலாம்.

பிறவியிலகப்பட்ட உயிர்களைக் காக்குமொருவன், தான் பிறவியெடுத்தானென்பது, பல கலைமான்கள் வலையிற் சிக்குண்டதைக் கண்ட ஒரு கலைமான், வலையிலகப்பட்டவற்றை விடுவிக்கவேண்டித் தானும் வலையிலோடிப் புகுந்தாற் போலும். அறத்தைத் தாங்குதற்கே புத்தர் பிறந்தாரென்னில், எல்லா உயிர்களும் அறத்தைத் தாங்கவே பிறந்தாரென்னலாம். அவைகள் உடலெடுப்பதற்கு வினை காரணமென்னில், அது நின் தலைவனுக்கும் உண்டென்பதாம். அவன் தன் விருப்பப்படி பிறந்தானென்னில், பிற உயிர்களும் அவ்வாறே பிறந்தனவென்னலாம். நின் கடவுள் தாயின் வயிற்றிற் றங்கவில்லையெனில், பிறக்கும்போதே தாயைக் கொன்று வெளிவந்தவன் கூறும் அறம் நன்று நன்று.

(புத்தர், தாயின் விலாவின் வழியாகப் பிறக்கத் தாய் குழந்தை பெற்று ஏழு நாளாயினவுடன் உயிர் நீத்தனளென்ப). புத்தன் பல பிறவிகளெடுத்துழன்றானென்பை யாயின், சிங்கம், புலி முதலிய கொடிய விலங்குகளாகப் பிறந்தானே? பிறந்தானாயின், பிறவுயிர்களைக் கொன்றுதானே உயிர் பிழைத்திருக்கவேண்டும். அங்ஙனம் பிற உயிர்கட்கு இடுக்கண் விளைத்தமை அறமாமா? அங்ஙனம் உயிர்க்கொலை யியற்றவில்லையாயின், அப்பிறவிகளிலே அவன் எதை அருந்தினன்? எல்லாருடைய துயரத்திற்கும் அவன் கருணையுடையானென்னில், குற்றஞ் செய்து தண்டனைக் குரியார் தண்டனைப்படுங் காலத்திலே அவர்கட்கு இரங்கி அத்தண்டனையை விலக்குவனோ? விலக்கின், அது அறமாமா?

ஒரு பொருளையாய்ந்தறிந்து அதற்குள்ள சொல்லையுந் தெரிந்து, அப்பொருளையுரைப்பதன் முன்னே, முற்கணத் தறிவு கெட்டுவிடுமாயின், நூல் எவ்வாறியற்றமுடியும்? முன்னறிவின் தொடர்ச்சி பின்னறிவென்னின், முன் சொன்ன சொல்லே பின்னுமுரைக்கப்படவேண்டும். முன்னறிவு கெட்டுப் பின் தோன்றுமறிவு சிறந்த அறிவா மெனில், அறிவும் ஒரு கணத்தில் கெட்டொழிதலால், முன்னினும் அது சிறந்ததென்பதற்கேதுவென்னை? பிறர் சொன்னதை யறியாத பேதை சொன்னதொன்றை நூல் தெரிவிக்குமென்று கூறியவாறுமே. முதல், நடு, இறுதி மூன்று முரண்படாது உன் நூலமைவது எவ்வாறு? முதலிலே உண்டான அறிவு நடுவிலொன்று கூறுமுன் அழிந்திடும். இறுதிப் பகுதியை யியம்புமுன், நடுவிலுண்டாய அறிவு அழியும். ஆகவே, மாறுபாடில்லாத நூல், உன் கொள்கைப் படி எவ்வாறு அமைதல் கூடும்?

உன்கடவுள் பலவறங்களைச் செய்து முழுதுணர்ந்து பின் பிடகநூல் செப்பினான் என்றால், பிடகநூலியற்றுமுன் செய்யப்பட்ட அறங்களை உன்கடவுள் யார்பாலறிந்து செய்தான்? அவ்வறங்களை முன் ஒருவன் கூறினானென்றால், அவற்றைக் கூறினோனுக்கு அவற்றைச் செப்பினோன் யாவன் என்று கேள்வியானது வரம்பிகந்தோடுமென்றறிக. உன் பன்னிரு திறப்படுங் கடவுள் யார்? புத்தன் எனின், அவனுடைய ஆசிரியன் யார்? என்று மேற்கூறிய கேள்வி இதற்குமொக்கு மாதலின், உண்மையையாய்ந்து அறங்களையறிவித்தோனை பிறவாமுதல்வனென்பது முறையாம். உன் சப்தநூல், முத னூலா? வழிநூலா? சார்புநூலா? அது முதனூலெனின், மேல் அக்கொள்கை மறுக்கப்பட்டது. பிற இருவகை நூலுள்

யாயின், தோன்றுகின்ற பொருள் நின்று மறைதலால், அது அநித்தமா மென்றறிக, தோன்றும்பொருள் மறைதல் பற்றி அநித்த மெனப்பட்டாலும், அது அழிந்து சூனியமாகாமை யின், நீ கூறும அநித்தப்பொருள் யாதுமில்லை.

வயலில் விதைத்த வித்துக்கெட்டு முளையுண்டாதல் போல எப்பொருளுங்கெட்டே பின் அவ்வழியே தோன்று மெனனில் அவ்வாறு ஒருபொருட்கு ஆக்கக்கேடு கூறுதல் அருகமதத்தார் கொள்கையாமன்றிப் புத்தர் கொள்கை யாகாது.

முளையானது இலையுமரமுமாய வளர்ந்தபின் வளர்ந்த வாறே நில்லாது வளர்ச்சி குன்றிக் கெட்டொழியுமே யென்னில், வளர்ந்தபின் தேய்ந்து கெடுவது காரியப்பட்ட பகுதியே; காரண நிலையில், அது சூனியமாவதில்லை யென் றறிக.

உடலானது பூதகூட்டுறவாலாய உருவமென்னில், பூதங்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்ட குணமுடைமையால் அவைதாமே தம்மிற்கூடி உருக்கொள்ளமாட்டா. ஆனை பனை சந்தங்களின் கலப்பால், உடல் உண்டாகுமானால், மரத்தி லுள்ள உடும்பும் கல்லிடமாகத் தோன்றுந் தவளையும், மரத் தொடும்புபோல உண்டாவனவா? வினைதான் உடலாக வந்த தென்றால், இருவினைகள் தாமேகூடி உருவாதல் கூடுமா? அன்னமே உடல் ஆமென்றால், வயதுகாலத்தில் அன் னத்தை உண்டாலும், உடம்பு வளராமல் தேய்வதேது வென்னை? அறிவுதானே உடம்பாய் உருப்படுகிறதென்றால், அருவாயுள்ள அறிவு சடமாய உருவாதல் யாங்ஙனம்? உடம்பு என்பது புதிதாய் உளதாகுமென்னில், இல்லாத தொன்று

உளதாகாது. வித்தில் நின்று முன் இல்லாத மரம் வருவது போல, இல்லாததினின்று உள்ளது உண்டா மெனினில், மரம் வித்திலே நுட்பமாய அடங்கிநின்று வெளிப்பட்டுத் தோன்று வதன்றி வித்திலே இல்லாதது புதிதாக உண்டாகவில்லை. வித்தினின் மரம் காணப்படவில்லை யெனினில், நெல்லின் வித் தினின்று நெல்லுண்டாவதன்றிக் கமுகு உண்டாவதில்லையே. ஆகையால் நெல்லின் காரணமாகிய அதன் வித்திலிருந்து தோன்றுவதே தெரியும்.

மயிர்நிலையும்போலக் கந்தமைந்துங் கூடி உருவாய்த் தோன்றுமென்ற கொள்கையும் சௌத்திராந்திக மதத் தினதே. அதற்குமாறாகச் சூனியத்தில் நின்று உருவாய்த் தோன்றுமென்று நீ கூறுவதெப்படிப் பொருந்தும்?

உருவங்களில்லாத பூதநான்கும் உபாதாய நான்குங் கூடிய கூட்டத்தினாலே யுருவாவன வென்னில், அவை யெட் டும் ஒன்றோடொன்று கூடமாட்டா.

காற்றின்கண், அனல், நீர், மண் என்ற பூதங்களும், நிறம், சுவை, மணம் என்ற உபாதாயங்களும் பொருந்துமா றில்லை. நெருப்பிலே யொளி, காற்று, நீர், மண் என்பனவும், சுவை, மணம், என்பனவுங் கூடமாட்டா. நீரின்கண் நெருப்பு, காற்று, மண் என்பனவும், மணமுமில்லை. நிலத்தோடு, நீர், தீ, காற்று என்பன தம்மே கலப்புறுவதில்லை. பூதவணுக்களைப்பற்றி நீ பேசுவதன்றி, தன்மாத்திரைகளியல்பினை நீ அறியாய். ஆத லால், அவற்றைப்பற்றிப் பேச இடமில்லை.

மருந்தின்றன்மையில் மருந்து கரைந்து நுட்பமாய்க் கலந் திருப்பது போல, மேற்கூறிய எட்டும், மறைந்து நுட்ப மாய்க் கலந்திருக்குமென்னில், மருந்தினையும் எண்ணெயையுந்

செந்துறையிற் சோக்கு மருந்துவம்போல, தோன்றிய எல்லாவற்றை யுந் தோக்க ஒரு முதல்வன் வேண்டும். எடுத்தேம் அது எல்லாப் பொருளையுந் தருவன் என்னில், எல்லாப் பொருளும் ஒரு தலைமையனவாக வேண்டும். அவ்வாறின்றி, ஒன்றின் றொன்று மாறுதலின்றிக் காணப்படவில்லை.

பூதங்களையும், உபாதாய உருவையுந் தனித்தனி காட்ட முடியுமா? உபாதாய மென்பது பூதத்தின் குணம். குணமானது குணியோடு பிரிப்பின்றியிருப்பது. அது குணியின் வேறுபடத் தனித்து இருப்பதை யாண்டுங் காணுமாறில்லை.

உள்ள அறிவு கெட்டுப் புதிய அறிவைத் தோற்றுவிக்கு மென்கின்றாய். அழிந்து போன அறிவு இல்பொருளாயபின், புதிய ஒரு அறிவை அது எவ்வாறுண்டாக்கும்? ஒரு காலத்து அறிவு அழிந்து போகவே, அவ்வறிவிலறிந்த பொருளும், அது கொண்டு செய்த செய்கையும் புதியதாய்வரும் அறிவில் எவ்வாறு பொருந்தும்? அழியுமறிவு, பின்னறிவை யுண்டாக்கிய பின் அழியுமென்னில், முன்னறிவும் பின்னறிவும் ஒரு கணத்தில் நிலைபெறு மென்பது முடியும். இவ்வாறறிவு ஒரு கணத்தில் நிலைபெறமாட்டா; நிலைபெறுவது ஒன்றே யென்பது தெளியப்படும்.

முன்னறிவு முழுதுங் கெடாமல், ஒருபகுதி கெட்டு நிற்ப, கெடாத பகுதியில் நின்று பின்னறிவு உண்டாமென்னில், கெடாத பகுதி பின்னறிவாயப் பரிணமித்து நிற்கப் பின் அறிவு நித்த அறிவுப் பொருளாமேயன்றி, அழியும் பொருளாகாது. வயலில் உரமாக இட்ட எருவும் வைக்கோலும் கெட்டுப் பயிரையுண்டாக்குவது போல, அழியு மறிவு புதிய அறிவை உற்பத்திக்கு மென்னில், எருவும் வைக்கோலும்

தமது காரிய வடிவை பிறப்பனவேயன்றித் தமது சத்தி கெடப்பெறுவனவாதலின், அவை நீ கூறுமாறு அழிவனவல்ல. ஆதலால் அவை அநித்தமாகா, உணர்வு தோன்றும் அதனை தொடர்ச்சி கெடுதலில்லாதிருப்ப, அத்தொடர்ச்சியால், புதிய உணர்வு உதிக்குமென்றால், அத்தொடர்ச்சியே நித்தமாகும்.

ஆற்றிலே முன்னே ஓடும் நீர் சென்றொழியப் பின்னே வருநீர் தொடர்தல்போல, முன்னுணர்வு கெடப் பின்னுணர்வு தோன்றுமென்னில், முன்னொழுகிய நீர்விட்டதெல்லாம் அதனோடு சென்றொழிவதன்றிப் பின்வரு நீரின்பாற்றுமை போல, முன்னறிவிற்றோய்ந்த சீலம், பாவனை, புத்தி, நிடப்புணர்ச்சி முதலியவெல்லாம் பின்னறிவிற் பொருந்தா. முன்னீரும் பின்னீரும் ஒழுக்காகச் செல்லுதற்கேதுவாய தொடர்புபோல அறிவு நிகழுமாயின், அத்தன்மைய அறிவு நித்தமாமன்றி அநித்தமாகாது.

நீ கூறும் தொடர்ச்சியென்பது காரணமாயிருப்பதோ: காரியமாயிருப்பதோ: காரணகாரியமாயிருப்பதோ: சொல்லுக. அது காரணமாயின், நித்தப்பொருளே; அது காரியமென்றாலும் நித்தப்பொருளே; காரியப்பொருளெல்லாம், காரியப்படாதநிலையில், காரணமாய் நிற்பனவேயாகலான், காரண காரியமெனினும், நித்தம் எனப்படுதற்கிழுக்கில்லை. முன்னறிவையும் பின்னறிவையுஞ்சேர்ப்பதே தொடர்ச்சியென்னில், தோற்றக் கேடுடைய பிறபொருளுக்கு யாங்கூறியது அதற்கு மொக்குமாகலின், அதுவும் நித்தமென்பதே முடியும். அத்தொடர்ச்சி நீ கூறும் அறிவாதல்வேண்டும் அல்லது அறியப்படும் ஐங்கந்தங்களுள் ஒன்றாதல்வேண்டும். அது இரண்டுஞ் சாராததொரு பொருளாயின், அது அறிவுகளை ஒழுங்

வாறு நிகழாமைக்கேதுவென்னை? அறியுந்தொழிலே அறிவைத்தருமாயின், அறிவுக்குஞ் செயற்கும் வேறுபாடில்லை போலும். செயலதானே அறிவாம். அறிவு செயலுக்குக் காரணமென்பதில்லையாம்.

வினை அறிவைத் தரும், அறிவு வினையைத் தரும் என்றால் அறிவுக்கு வினைவேறு, செயலுக்கு வினைவேறென்பதில்லை. ஆதலால் ஒன்று மற்றொன்றிற்கு முதற்காரணமாகாது. மேலும், அறிவும் செயலுமே அழிவனவென்று நீ கூறுவதால், ஒன்று மற்றொன்றை யுண்டாக்கவல்லதன்று. நெருப்பானது விறகிற் பிறந்து அவ்விறகை எரித்துவிடுதல்போல வினையிற்பிறந்த அறிவு, அவ்வினையை யழித்துவிடுமென்னில், அறிவு பிறந்தவுடனே வினையை யழிக்கும் அவ்வினை கெட்டொழியவே, அது பின்னறிவை யுண்டாக்காது. நெருப்பு விறகை யழியாதேயன்றிப் புதிதாக விறகையுண்டாக்காமைபோல் அறிவும் வினையை யழிப்பதேயன்றிப் புதுவினையை யுண்டாக்கமாட்டாதென்பது முறையும். ஆதலால் வினை அறிவைத் தருமென்பதும், அறிவு வினையைத் தருமென்பதுமாய நினது கொள்கை பொருந்தாமை காண்க.

பேயும் நரகரும் தேவரும் பிரமரும் தாய் தந்தையரின்றி உடம்பெடுத்து வருவரென்பாய். உடம்பென்பது காரியப் பொருளாயிருத்தலின், அதற்குக் காரணமிருக்கவேண்டும். அத்தகைய காரணம், ஆமறிவாய்: பூதமும் பார்த்தாயுமாக நீ கூறும் எவைபொருள்? வினையா? உடம்பையுண்டாக்கினைத்தவர்? ஆராய்ந்துணர்க. ஆராயில் உலகிற்குக்காரணம், முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணமென மூன்றுளவென்பது புலனாம்.

உருவக்கந்த முதலிய ஐந்து கந்தங்களின் கூட்டமே உயி ரெனப்படுமன்றித் தனியே உயிரெனப்படுவதில்லை யென்றனை. உருவக்கந்த முதலியவற்றை அறிவது யாதெனில், விஞ் ஞானமென்றாய், விஞ்ஞானத்தை யறிந்தது யாரெனில், விளக்கு பிறபொருளையுந் தன்னையுமுணர்த்துதல்போல விஞ் ஞானம் பிறவற்றையுந் தன்னையு முணர்த்துமென்றனை. விளக்கிற்கும் பிற பொருள்களுக்கும் வேறாக அவற்றை யறியுங் கண்ணிருத்தல் போல, விஞ்ஞானத்திற்கும் பிறவற்றிற்கும் வேறாக விஞ்ஞானத்தையுடையா னொருவ னுளனென்றறிக; அறிவும் அறிபவனும் வேறென முன்னே தெரிக்கப்பட்டது.

உடம்பு, பொறி, மனமுதலியவற்றை நானென்று கூறுவை. உடம்பு தூக்கத்திலொன்றையு மறியாது. பொறிகள் ஒன்றறிந்ததை மற்றொன்றறியாது. மனம், கணந்தோறுங் கெடுதலால், கால மூன்றையு மறியமாட்டாது. ஆதலால் எல்லாவற்றையும் ஆராயு மறிவுடையதாய் உடல், பொறி, மனம், என்ற மூன்றையுமறிந்து, அவை தானல்லவென அறிந்து மனத்தால் ஒன்றை நினைந்து பொறியாற்கொண்டு உடம்பாற் செயலாற்றும் உயிர்வேறுண்டென அறிக.

முன் ஒன்றையறிந்த உணர்வுதானே, பின் அதனை யானறிந்தேனென வுணருமாதலின், உணர்வுக்குவேறாக உயி ரொன்றில்லையெனில், முன்னே ஒன்றைச்சொன்னேன் என்ற விடத்து வாய் அவ்வாறுசொல்லியதோ? வாய்க்குவேறுள்ள ஒருவன் சொல்லியதோ? அது வாயையுடைய ஒருவன் சொல்லியதெனத் துணிதல்போல, மனத்தால் அறிவன வெல்லாமறிந்து நான் அறிந்தேனென்பது எதுவோ அதுவே உயிராகும். வாயால் ஒன்றை மொழிந்தும், காயத்தால் ஒன

றைச்செய்தலும் அவ்வுயிரேயென அறிக. அவ்வுயிரே அறிவுக்கு ஆதாரமாயுள்ளது.

பொறிகளாலுணர்தலும் அறிவு, மனத்தாலுணர்வதுமறிவு என்று இரண்டினும் ஒன்று கெட்டு மற்றொன்று நிற்கும் என்றால், நனவின்கண் பொறிகளாலறிந்த ஒன்றும் கனவிற் புலப்படாது. மனவறிவு மாத்திரம் நிகழுங் கனவிற் கண்டதொன்றும் நனவில் விளங்காது. அது எவ்வாறெனில் பிறவிக் குருடன் புறத்தேயுள்ள வடிவங்களையும் நிறங்களையும் அறிந்திடாமை போலென்க. பொறியுணர்வு நிகழும் நனவும், மனவறிவு நிகழுங் கனவும், ஒழிந்து தூக்கம் என்பட்டவிடத்து இரண்டின் தொடர்பு மற்றுப்போதலின், அவை மீண்டு தோன்றுதற்கு இயைபில்லையாம். ஆனால், அந்த அவத்திலே உணர்வு மீண்டு முதிக்கக்காண்டலின், நனவினையுங் கனவினையுமுணர்ந்து உணர்விற்கு ஆதாரமாய உயிர் உண்டென்றறிக.

ஒரு பொழுதிலே, ஒரு பொறியிடத்திலே ஒருணர்வு நிகழுமென்றனை. செவிப்பொறி யென்பது இரண்டு செவியினைக் கொண்டுள்ளமையால், இரண்டு செவியுஞ் சேர்ந்த ஓரோசையைக் கேட்டல் இயலுமென்பது முடியும். ஒருசெவியாலேயே ஓசையைக்கேட்டல் இயலுவதொன்றாகலின் அக்கருத்துந் தவறுதல்காண்க.

ஒரு காலத்திலேயே ஒருவனே இருகண்களாலும் ஒவ்வொரு கண்ணாலும் பார்த்தும், இருகாதினாலும், ஒவ்வொருகாதாலும் பிறர்சொல்லைக்கேட்டும், மனம் செய்தியை யறிகின்றது. மனங்கூடாமல், ஐம்பொறிகள் தாமே ஒருங்குகூடி ஒன்றை அறிவதில்லை. ஐம்பொறிகளும் ஒன்று அறியக்கூடியதை மற்றொன்று அறியாது. கண்பார்க்கும், காதுகேட்கும், பார்த்

தலையுங் கேட்டலையும் உடனிகழ்த்துவதற்கு மனமும் அவற்றோடு கூடவேண்டும். மனந்தானும், ஐம்பொறிகளுள், ஒவ்வொன்றோடு கலந்து, அது அறியக்கூடியதை யறியும். மனத்திற்குப் பார்த்தல், கேட்டல், முதலிய பலவகையறிவும் இயலும். அம்மனந்தானும் ஒரு பொறியோடு கூடி ஒன்றை யறியும்போது, பிறிதொரு பொறியோடு கூடிப் பிறிதொன்றனை யறியாது. அம்மனத்தைக்கொண்டு எல்லாவற்றையும் அறிவது உயிர் என்றறிக. மனமும் ஐம்பொறிகளும், கணந்தோறும் அழிந்து தோன்றுவனவாயின், அவை அகத்தே நில்லுமே பொழிய, அவை தங்குமுருவமும், வயதுக்கேற்ப மாறுதல் களும் ஏற்படக்காரணமில்லை.

தூங்குகிற ஒருவனை எழுப்பின், அதனையறிந்தெழுந்து வருதற்கேதுவாய உணர்வு எவ்விடத்துள்ளது? அது நெஞ்சில் உள்ளதென்னில், பொறியின்கண் நிகழுஞ் செயலையறிந்து எழுவதற்கு நெஞ்சத்தில் மனம் இருக்கவேண்டும். மனம் அழிந்துபோயின், அது எப்படி உண்டாகும்? திரியைப்பற்றி நின்ற ஒளி, திரிமாய்ந்தவுடன் மாய்வதன்றித் தகழியைப் பற்றி நிற்பதில்லை. துயிலின்கண் பொறிகளிற் பற்றிய அறிவு அடங்கி யழிந்திடின், பின் அது நிற்குநிலை யாதெனக்கூறுக.

விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், தொழிலியற்றுதல், முதலியன அறிவிற்கில்லை. அவற்றையுடையது உயிரென அறிக. ஒருகாலத்திலே ஒருபழத்தைத்தின்றவன் அதன்சுவையை மீட்டும் அத்தகைய பழத்தைக்கண்டபோது நினைத்தல் தெரிவு. வெறுப்பு முதலிய குணங்களும் அத்தன்மையனவே. இவற்றை முன்பின் உணரும் ஒருபொருள் உயிரெனத் துணிக.

எல்லாப்பொருள்களுக்கும் போக்குவரவு செய்தற்கு வழியாய இடங்கொடுத்து அவற்றை நீங்காது இருக்கும் வெளிக்கும் இடமாய, அவையாகாதிருப்பது வான். அதன் குணம் ஓசை. அதுபிற பூதங்கள் நான்கும் தோன்றி யொடுங்குதற்கு ஆதாரமாயுள்ளது. காலமெனப்படுவது, பொழுது, நாள், திங்கள் முதலிய பலவடிவுடையதாய, முறைமைந்தாய நன்மை தீமைசெய்வதற்குத் துணையாயுள்ளது. திக்கெனப்படுவது, கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு முதலிய பிரிவுகளுடையது மாற்றமில்லாதிருந்து செயற்குரிய பயனைப் பெறுதற்குத் துணைபுரியும்.

உலகமெல்லாம் காரியப்பொருளாயிருத்தலானே, குட முதலிய கலன்களை வனைதற்குக் குயவன் வேண்டுமாற்போல உலகினைக் காரியப்படுத்தும் ஒருவினைமுதல் வேண்டும். சிறந்த அறம், பொருள், இன்பம், வீடென்னும் உறுதி உயிர்கட்கு நலமுறும் நற்செயலுமுரைப்பது நூல். அந் நூலினைக் கூர்ந்த அறிவுடைய பெரியோர் பரம்பரையாக ஓதி வருதலால், குற்றமற்ற முறையில் அம்முறையைச் செப்பிய மேலறி வுடையோன் ஒருவன் இருத்தல்வேண்டும். நூலிற்கட்டளை யிட்டவாறு நடப்பதையறிந்து பயனளிக்குஞ் சான்றாண்மை ஒருவன்வேண்டும். உலக முதல்வனும் மெய்யறிவு நல்கிய வனும், எவ்வுயிரின் செயலுக்குந்தக்கவாறு பயனளிப்பவனு மும் உள்ளவனே சிவனென அறிக.

மரங்கள் உயிருள்ளனவல்ல வென்பர். அவை வாடுத லானும் வளர்தலானும் உயிருள்ளனவே. உணர்வுடைப்பொருள், உயிருள்ளன வளர்தலும், உணர்வுபெறுவிழல் வாடுதலுஞ் செய்யும். பட்டமரம் உயிரற்றதாகலின், அதற்கு நீர் விட் டாலுந் தளிர்ந்து வளராது.

மரத்திற்குப்பொறிகள் இல்லையெனில், உயிரையுள்ளடக்கிய கருப்பை, முட்டை, முதலியவற்றிற்கு அவை வெளிப்படாமைபோல, மரத்திற்குமாமென அறிக. முதிரச் சிந்தனை அவை வெளிப்படும். மரங்கட்குப் பூத்தலும் காய்த்தலும் வளர்தலும் முறைமையாகலின், அசேதனப்ருரிய பொறிகள் உளவெனக் கொள்க.

ஒருமரத்தின் கொம்பைப்பிடுங்கிப் பிறிதோரிடத்தே நட்டபோது, அதுவும் பிறிதொரு மரமாய்க்கிளைத்தலின், ஒருயிர் பலவுயிராயிற்றேவென்னில, வித்து, வேர், கொம்பு, கொடி, கிழங்கு என்பவற்றைக் கருப்பமாகக்கொண்டு உயிர்கள் பிறக்கும். கருப்பையிற் பிறப்பதுபோல, முட்டையிலும் வியர்வையிலும் உயிர்கள்பிறக்கக் காண்கின்றோமல்லவா? மர முதலியன நடவாவென்னில, மக்களுட் காலில்லாதவர்கள் நடக்கின்றார்களா? அதுபோலப்படைப்புப் பலவிதமெனவறிக.

செத்ததைத்தின்றாற் குற்றமில்லையெனின் நீ புலால் புசித்தற்பொருட்டு ஒருவன் ஓருயிரைக் கொன்றால், உனக்கே அவனுக்குப் பாவமுண்டாதலின, நீ பாவகாரணனாகிப் பாவஞ் செய்திலையோ? பாவஞ்செய்வித்தல தவமாமோ? நீ உன கடவுட்குப புலாலிடுவையாயின, அது உன் குற்றமாகாதோ? மேலும், உன உடலேயே அசுத்தமானதென்று வெறுக்கின்ற நீ பிறிதோருடலின அசுத்தத்தை யுணராது எங்ஙனம் புலால் புசிக்கின்றாய்?

இப்போதுள்ள உடம்பானது குடையைப்போலுமெனின், பிறிதோருடம்பு அதன் சாயைபோலும். அவ்வாறே பிறிதோருடம்பைக் கண்ணாடியிற்றோன்றும் வடிவத்திற்கு ஒப்பிடுதல் கூடும். அத்தகைய உடம்பை அறியாமற்றுதலே

பிறப்புக் கொள்ளுதலாகுமென்னில், குடையுங் கண்ணாடியிற் காட்டிய உருவமும் இல்லையாயின், அவற்றின் நிழல் இல்லாதவாறுபோலக் கந்தங்களைந்துங் கெட்டொழிந்து விடக்கெட, அவற்றின் நிழலுமில்லையாகவே, பிறிதோருடம்புமில்லையாம். கந்தங்களைந்துங் கெடுமிடத்தே அறிவுங் கெடுதலின், முத்தியையடையும் அறிவு வேறுயாதுளது?

கனவின்கண், உள்ளவுணர்வு, பொறியுணர்வாறும் போல, வினைக்கீடாக எழுமறிவு முத்தியடையுமெனலின், செயலில்லாத உறுப்புகளுடைய உடம்பு, முடம், குருட்டுப்பிறவி யெனுமிவற்றை உயிர் நீக்கவிடக்கெட, எத்தகைய அறிவு கதியடையுமாறு? மேலும், வினைபற்றியெழு முணர்வு, பிறப்பிற்கேதுவாய உடலைப்பற்றி நிற்பதன்றி முத்திக்கேதுவாதலில்லை.

கந்தங்களைந்துந் தொடர்ந்து செல்வன. அவை தொடர்ச்சிகெட்டுத் தொழிலறுதல், கட்டுக்கேதுவாய துயரென்றும், அவைமுற்றுமழிந்தொழிதல் முத்தியின்பமென்றுங் கூறினும். முற்றுமழிந்தவிடத்து அறிவுமழியவே, முத்தியடைவது எது? கந்தங்கள் ஐந்திலொன்றாமறிவு முத்தியெய்துமெனனில், அவ்வறிவு நிலைத்தபோது, கந்தங்களும் உள்ளன. அவை கெடாவாகவே, முத்தி என்றுமில்லையென் பதேமுடியும். ஆதலால் நின்கொள்கை தவறு.

கடவுள் ஒருவனே உயிர்களைப் பிறவிக்கடலில் நின்றெடுத்து முத்தி சேர்ப்பனென அறிக.

## யோகாசாரன் மதம்.

அறிவே உள்ளபொருள். அதுவே காணும் பொருள்களாயத் தோன்றுவது. அறிவு பொறிகளினுணர்ச்சியாற்

றிரண்டெழுவது. அது வடிவில்லாதது. (அருவமானது.) ஆதலால் வடிவொடு தோன்றும் புறவுலகம் கனவு போல்வது. அறிவே நிலையாக உள்ளது.

## யோகாசாரன் மதமறுதலை

போதம், வாசனையென இரண்டு உள்ளன என்கின்றாய். வாசனையென்பது, விருப்பத்தோடு ஒருபொருளினை அறிவுற்ற, அப்பற்றுக்காரணமாக எழுங்கருத்தாமாதலின், புறப்பொருளின்றி வாசனையில்லை. கனவென்பது, நனவிற்கண்ட பொருளிற்பற்றிய கருத்தால் நிகழ்வதாகலின், நனவைக் கனவென்றால் அந்நனவிற்கு வேறாக நனவு ஒன்று உண்டென்பது முடியும். முடியவே, அறிவிற்கு வேறாகப் புறவுலகமுண்டென்பது தெளிவு.

அறிவே காணப்படும் பொருள் எனின், நானென்பது உடம்பென வேண்டும். உடம்பின் வேறாய அறிவு இல்லையெனின், உடம்பே உள பொருள். அறிவென்பதில்லை யென்னலாம். உருவப் பொருளின் வேறாய் அறிவு அருவமாயுள்ளதென்பது நின்கொள்கை. அறிவுள் உருத்தோன்றுதற்குக் காரணம், அறிவு தான்பற்றிய பொருள் உருவமுடையதாயின் தானும் அவ்வுருவின் மயமாய் நிற்பதே. அது பளிங்கானது தனைச் சார்ந்த உருவின் தன்மையை அடைவது போலாம். உண்மையை ஆராயுமிடத்து அறிவும் அறியப்படுபொருளும் வேறென உணர்க.

## மாத்தியமிகன் மதம்.

பொருளாகத் தோன்றுவது அதன் அங்கங்களே. பொருளைப் பிரித்துப்பிரித்துப் பார்த்தால், அதன் உறுப்புக்களைத் தவிர, அவற்றையல்லாமுடையதொன்றைக் காணுமாறில்லை. ஆதலால் உறுப்புக்களொழிந்தவிடத்துப் பொரு

யென்பது அவற்றின் வேறாயதாமில்லை. அதனாற் பொருள்கள் என்பன தோற்றங்களே யன்றி உள்ளன வல்ல. பொருள்களை யறிவது அறிவன்றி, பொருள்களில்லாத போது அறிவென்பது மில்லையெனப்படுதே முறையாம். ஆதலால், உண்மையில் எல்லாஞ் சூனியமே.

## மாத்தியமிகன் மதமறுப்பு.

நூலின்றாயது வேறு, மண்ணின்றாயது வேறு. ஆடை, குடம், என்ற இவ்விரண்டினுள், ஆடையிலே குடத்தினவயவ மில்லை. குடத்திலே ஆடையினவயவமில்லை. இதனால், அவயவங்களின், அவயவங்கள் பல வேறு தொகுதிகளாகக் காணப்படுமிடத்து, ஒரு தொகுதியினவயவங்கள், பிறிதொரு தொகுதியிற் காணப்படாமைக் கேதுவாக அவ்வத்தொகுதிகளைத் தொகுத்தொருமைப்படுத்திநிற்பன அவயவிகள் உள்ளன வென்றறிக.

அவயவமும் அவயவியுங் கூடியதே பொருள். பொருளுண்மை கூறவே, பொருளையறியும் அறிவுண்மையும் பெறப்படும். புறப்பொருள்களுமே அவற்றையறிதற்குக் கருவியாய பொறிகளும், அவற்றையாளும் மனமும் ஒருங்கிருப்பினும், உயிராகிய பொருள் அவற்றைக் கூடாவிடத்து, அறிவு நிகழ்வதில்லை. உயிர் உள்ளபோது அறிவு நிகழும். ஆதலால், அறிவும் அதனையுடைய பொருளாய உயிரும் உண்டென அறிக.

## வைபாடிசன் மதம்.

மஞ்சளுஞ் சுண்ணமுங் கூடியகாலை, சிவப்புநிறம் உண்டாவது போல, புறப்பொருளும் அறிவுங் கூடியே உலகமாம். இதனையறிதலே ஞானம். இந்ஞானம் வீடுபயக்கும். இக்கொள்கையுடையோரே தேரர் எனப்பட்டார் போலும்.

மற்றைஞானங்களையும்போல இவைகளொன்றாதற்குப் புறப்பொருளும் அறிவும் ஒன்றாவன வல்ல. பொருள் புறத்தேயுள்ளது. அறிவு அகத்தேயுள்ளது. அறிவு அருவம். அறியப்படுவது உருவமுடைத்து. ஆதலால் இவைதம்முட் கூடாவெனத் தெரியின், வைபாடிக கொள்கை நிலையாது. இதனால், சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்தியமிகன், வைபாடிகன் என்னும் நால்வகைப் புத்தமதக் கொள்கைகளும் ஒருவாறு மறுக்கப்பட்டன. இனி, அருகமதத்தாருள் நிகண்டவாதி, ஆசீவகனென்ற இரு கொள்கையினருளர். அவர்கள் மதங்கள் ஆராயப்படுகின்றன.

## நிகண்டவாதி மதம்

கண்டம் = உடை. நிகண்டம் = உடையின்மை. அரோக மாக்கைப் பேணி, ஆடையை யொழித்து முழுகாது மாசடைந்து இல்லற வாழ்க்கையை விட்டு, மறைமுறை பேணாது, வயிறார உண்டு, பாயிருந்து மயிற்பீலியைக் கையிற்பிடித்துக் கொல்லா விரதம் பூண்ட நிகண்டவாதி மதம் வருமாறு:—

கேடற்ற கடையிலாஞானம், கடையிலாக்காட்சி, கடையிலாவீரியம், கடையிலாவின்பம், பெயரின்மை, குடிவழியின்மை, வயதின்மை, அழியாத் தன்மையாகிய எண்குணங்களையும், மதிக்குத் தண்மை இயற்கையாயினாற்போலத் தனக்கு இயற்கையாகப் பெற்றவனும், அறிவு மறைப்பு முதலிய தீக் குணங்கெட்டுமிலனும் விண்ணவர் போற்றும் பெருமையுடையவனும் அருகதேவனே இறைவன்.

அவன், பொறிகளாலே, பொருள்களையுணருங் கட்டுப்பாடொழிந்து, முக்காலத்திலும் நிகழ்வனவற்றை, ஒருகாலத்திலேயறியும் பொருந்தவன் கடவுள். தன்னை வழிபட்டவர்க்

றும், தன்னொடு மாறு பட்டவர்க்கும் ஒரு தன்மையை யுடைய தலைவன.

பசி, தாகம், பயம், செற்றம், ஆசை, மோகம், கவலை, பழி, நோய், சாவு, வியர்வை, துன்பம், செருக்கு, பிறப்பு, மூப்பு, உறக்கம், என்பவற்றை விட்டு, என்றும் வழுவாப் பொன்னெயில் வீற்றிருந்த அருகன், சிறப்பிட்டுக் கேட்ட தேவர்க்கு ஒரு மொழியால் விடையளித்தனர். அவ் வொரு மெய்ம்மொழியை அடிப்படையாகக் கொண்டு, சித்த பரமேட்டி, சாரணர் முதலியவை பொருந்திய யோக முதலானோர், உலகின் மயங்காத வகை இயற்றினன்.

அதன்மம், காலம், உயிர், அறம், மறம், அறப்பயன், மறப்பயன், வான், புற்கலம், கட்டு, வீடு, என்ற பத்தும் முறையான; அவை படைக்கப் படாதன.

காலமானது, இறப்பு, நிகழ்வு, எதிர்வு என முறைமைப் பட்டு, ஒரு தனிப்பொழுதிலே முக்காலச் செயலும் முன்ன வாறு நிகழ்தற்கேதுவாயது. அக்காலக் கொள்ளைப்பட்டு வாழு முயிர்கள் எடுத்த உடம்பு முழுதினும் நிறைந்து உடம் பிற்குரிய அளவைத் தனையுடையதாய், அவ்வளவைத் தேற்ற அறிவு பெற்று விளங்குந்தன்மையது. அறத்தாலெடுத்த உடம்பு, புதுவுடம்பிற்கு அழிவு செய்து, பிறப்பதுவுந் துணை புரியும். மறத்தாலெடுத்த உடம்பு, புதுவுடம்பை நிலைபெறுத் திப் பிறவியிற் செலுத்துவது.

அறப்பயன், முன்னைத் தரும் நன்மையாம். மறப்பயன் பின்னைத் தரும் தீமையாம். எல்லாப் பொருட்கும் இடங் கொடுத்து நிற்பது, வான. வலியுடைய அணுக்களாலியன்று, இரும்பு, கல், மரம் முதலிய உருவங்களைக் கொண்டன. அவை புற்கலமாம். அவற்றைத் தொழில்களே கட்டாவன.

காமம், வெகுளி, மயக்கம், உலோபம், செருக்கு, பொறாமை என்பனவே, கட்டிற்கேதுவாவன. வினைப்பயனுகர்ந்து வினை அறவே ஒழியப் பெறுதல், வீடாகும்.

அறுபகையையுந் தெறுதற் றவநெறி நிற்பதால் இரு வினைப்பயன் மாட்டு உவர்ப்பெய்தி வீடெய்துதல் கூடும். உயிர்கள், தேவகதி, மனிதகதி, நரககதி, விலங்குகதியென்ற நாற்கதியிற் பிறந்துழலும். இவற்றின் வேறாயினவே புற்கலமென்பன. அவை உயிரில்லாதன. உயிர்போல்வன. பறவைகள் விலங்கினுளடங்கும். இது சமணர் கொள்கை.

## நிகண்டவாதி மதமறுதலை

நீ உன் கடவுளுக்குக் கூறுஞ் சிறந்த எண்குணங்கள் இடையே வந்தன. ஏனெனில், தீக்குணங்களை நீக்கியே, அவன் நற்குணங்களுடையனானன். அங்ஙனஞ் செய்தல் உயிரினியல்பே, கடவுளியல்பன்று. அவன் முதலில் தீக்குணங்களுடையனாயிருந்தானென்பது பெறப்படுதலின், அவனைத் தலைசிறந்த மனுவிருத்தரை ஒத்தவனாக வேண்டும். அவன் யார்? அங்ஙனமனுவிருத்தனைக் கடவுளென்றால் சாதாரண மனுவினைக் கடவுளென்றல் தக்கதோ? கூறுக.

உன் கடவுள் கருவிகளின் உதவியின்றியே எல்லாவற்றையும் அறிய வல்லனாயின், அவன் உடலெடுத்ததென்பது எதனால்? உடலெடுத்தால், கட்டுப்பட்டு, மன முதலிய கருவியின் உதவிகொண்டுதான் பொருள்களையறிதல் கூடும். முக்காலத்தையும் ஒருகணத்திலறியவு முடியாது. கருவிகள் நீங்கிய போது, பொருளனைத்தையுமறிதல் கூடாது. (ஆதலாற் கடவுளுக்குப் பிறவியில்லையெனவறிக.)

விருப்பு வெறுப்பற்ற அவ்வருகன் நீக்கினவர்கட்கெல்லாம் அருகபயமினைச் செய்தல் இயலாது. என்னை? அவனை

முத்தியின்பமடையக்கருதி உடலை வருத்துதல் நன்மையெனின் அதனைக்கருதி உணவுகளை அரிந்து கொள்ளுக.

முன்வினைப்பயனை முற்றிலும் துய்த்த பின்னர்த்தான் பொன்னெயில் வட்டமடைதல் கூடுமெனின், அதனை அளவிடுதல் முடியாது. வினைப்பயனை முற்றிலும் புசித்துத் தொலைத்த பின், பொறிகள் புலன்களையறிய மாட்டா. தவஞ்செய்யவு முடியாது. அது கடல்நீர் வற்றியபின், அங்குள்ள மீனைத் தின்னலாமென்று ஒருபூனை நினைந்ததுபோலாம். நீ பிறவிக் கடலில் நின்று ஒரு கடவுளுதவியின்றிப் பொன்னெயில் வட்டத்திற்கேறுவேனென்பது, கிணற்றினுட் கிடக்கின்ற குடம் தானே கரை யேறுதற்போலும். ஒருவன் எடுக்கவே, குடம் கரைசேர்வதொப்ப, சிவனை எடுக்கவே, பிறவிக்கடல் நின்று உயிர் கரையேறுமென்றறிக.

## ஆசிவகன்மதம்.

சமணருள், ஆசிவகன் என்பான், என்னுயிர்க்குப்போல, எவ்வுயிர்க்கும் இரங்குவனென்று சொல்லித் தன்னுயிர் வருந்துமாறு தலைமயிரைப் பறித்துப் பிறவுயிர்களும் அவ்வாறு வருந்தவே அறங்களியம்புவான்.

எல்லையில்லா அறிவுடையனும் அருகப்பரமன், ஆம்பிலே இயற்றிய நூலிற் கூறிய அணுக்கள் ஐந்துவகைப்படும். நிலம், நீர், தீ, காற்று, உயிரென்பன அவை. நிலம் வன்மையுடையது, நீர் தண்மையுடையது, நெருப்புச் சூடுடையது, காற்று இயங்குந்தன்மையது, உயிர் அறிவுடையது. நிலமும் நீரும் கீழ்ப் பரவும். நெருப்பும் காற்றும், மேல்நோக்கிச்செல்லும். உயிரானது உடம்பினைச்சேர்ந்திருக்கும். அது நீங்கப் பெற்றால், பிற நால்வகையணுக்களோடும் உயிர்சேரும். அவற்றைச்

சார்ந்து, சார்ந்த தன்மையதாய் நிற்கும். உயிரொழிந்த பிற அணுக்கள், அறிவுடையனவல்ல. ஒரு அணுக்கெட்டு மற்றொரு அணுவாகவுமாறாது. ஒன்று மற்றொன்றின்மேல் புகுவதுமில்லை. ஆனாலும் அவை உடம்பின்மேல் பொருந்தியிருக்கும். இவை தம்முட் கூடுவனவன்றி இவற்றோடு புதிதாக வந்து கூடுவதியாதுமில்லை. பழமையான இவற்றின் கூட்டம் ஒழிவதுமில்லை. இவை ஒருங்கு கூடுதலின்றி ஒவ்வொன்றாய்க் கூடுவதில்லை. இவற்றின் செய்தி ஒருகாலத்தும் மாறுவதில்லை.

அணுக்களை விரித்தல், நீட்டல், குறுக்கல், குவித்தல் அழுக்குதல், உண்டுநின்றொழித்தல், பட்டுப்போகுதல், உடைத்திடல் ஆகிய ஒன்றுஞ் செய்யமுடியாது. அவை உடம்பிற்குப் புறத்தும் உள்ளும் நிலவுவன; எங்கும் பரவி, பண்டும், இன்றும் என்றும் ஒருதன்மையவாயுள்ளன.

உயிரெனப்படும் அணுவானது, கட்புலனாகாதது. வினையினாற் பிறந்து விதம்பல உருவங்களையடைந்து நிற்கும். அதனைப் பொன்னொளியில் வட்டத்துள்ளே தேவரெனவறிவர். அது பிறநான்கணுக்களாலாய பொருள்களிலெல்லாம் பொருந்தும்.

உயிரணு ஒழிந்தொழிந்த நான்கு அணுக்களும் ஒருங்கு கலந்து தாமேயன்றி மும்மூன்றாகவும், இரண்டிரண்டாகவும் கூடுவதில்லை. நிலம், நான்கு குணமுடையது. நீர், மூன்று குணமுடையது. அழல் இரண்டு குணமுடையது, காற்று ஒருகுணமுடையது. இவற்றின் நான்கு குணங்களும் கூடி நிற்கும். அவை நாற்றம், சுவை, ஒளி, ஊறு என்பன. வெண்மையும், பொன்மையும், செம்மையும், நீலமும், பசுமையும், மிக்க வெண்மையுமாய ஆறு நிறங்களுள், மிக்க வெண்மை

காலத்தில் மக்களுடம்புந் தேவருடம்புமுடையவராவார். ஆத லால், நாலியற்றுவது மக்களுட் சிறந்தார் தொழிலென்பது முடியும். முடியவே அருகபரமர் தந்த நூலில்லை யெனவறிக.

உயிர்கள் உடல்களைப் பற்றியும் ஒட்டியுங் கலந்தும் பின்னுறுமெய்து மென்பது, துயிலவர்க்கும் குழந்தைகட் கும் பொருந்தாமையறிக. அணுவானவை கீழ்நோக்கியும், மேல்நோக்கியு மிருக்குமாயின், அவைதம்முள் ஒருங் கிணைந்து உறுப்புக்களாய உடம்பிற்பொருந்தமாட்டா வென பது முடியும். உடம்பின் உறுப்புக்களாய அணுக்கள் கூடி யிருக்கவேண்டுமாயின், அவையுறுப்புக்கள் அழிதல் கண்கூடாதலின் அவ்வணுக்கள் மாறாத நித்தியப் பொருளாய உடம்புள் நிலை மென்பது பொய். உடம்பில் அவை கூடி உறுப்புக்களாகா வெனின், அவற்றின் குணங்களையுடைய குருதி, தசை முதலியன கலந்திரா. பலபலபகுதியாயப் பிரிவுற்று நிற்கும். அவ்வாறு நிற்பின் உடம்பென்றவொரு பிழம்பு இல்லையாம்.

உயிரென்ற அணு உணர்வுடையதால் பலவகைப் பிறப்புக் களும் எடுக்கின்றன வென்னில், அவ்வணு அறியுந்தன்மை யுடையதேயன்றித் தம்முட்கூடி மியல்பில்லாதவற்றைக் கூட்டுவிக்கு மியல்புடையதன்று. நல்லவை யணுக்கள் கூடாவியல்பினவாயின், அவற்றைக் கூட்டவும் இயலாது. ஆயிரங் கோல்களைச் சேர்த்தாலும் அவை ஒருதூணாகுமோ?

வினைக்கேற்றபடி, உடல் உயிர்க்கு ஏற்படவேண்டும். அணுக்கள் அறிவில்லனவாதலால், தாமே அவற்றிற்கேற்ற வாறு கூடா. காற்றணு, பிறபூதங்களைக் கூடுமென்னில், அது வினைசெய்யுமுயிரை யறியமாட்டாது. வினைதானும் அணுக்களைக் கூட்டும் அறிவுடையதன்று. ஆதலால் வினைக

வேறு உடம்பை உயிர்க்குக் கூட்டுவிக்கு முதல்வன் ஒருவ னுளனென வறிக.

---

## பட்டாசாரியன் மதம்

வேதத்தைப் பெரிதாகப் போற்றி அதிலுள்ள பொருளை மொழிந்து, வினையாலாகிய மெய்த்தவத்துக்குரிய வேள்வி யாகம் முதலியன விளக்குங் கருமங்களைச் செய்யு முறையினை ஜைமினி முனிவன் கூறிய மீமாஞ்சை நூலினைக் கருத்தாகத் தழுவிப் பட்டாசாரியன் இயம்பிய கொள்கையாவது:—

உயிர்கட்குக் காமம், வெகுளி, முதலிய குணங்கள் பொருந்தும். அவை மிகுந்திருப்பின், வேதம் கூறும் மெய்ந்நிலை அமையாது. கூறு நூலினை ஆராய்ந்தால் அறிவு விளங்கும். கல்வியில்லாவிடத்து மக்கள் [illegible] உண்மையுமொப்பர்.

வேதத்தைச் சொல்லிய கடவுள் ஒருவன் உண்டெனின், அவன் உருவமில்லாது நாவியற்ற முடியாது. உருவங்கொண்டு நூல் கூறினன், அவன் கற்பனையே அவனுடைய அறிவு உள்ளதாம். அவன் இயம்பும் நூல் மெய்ந்நூலாகாது. ஆதலால் வேதம் தானாக உண்டானதே. தேவரும் முனிவரும் சித்தரும் நரரும் பிறரும் வேதமியற்றியவ ரின்னாரென்று அறிய முடியவில்லையென்றே சொல்லுகிறார்கள். பரம்பரையாக வேதநூல் ஓதப்பட்டு வருகிறது. கிணற்று நீர்போலச் சுரப்பதென்றும் அதனைக் கூறுதல் தவறு. கிணறு ஒருவனாற் தோண்டப்பட்டது. வேதம் சுயம்புவாகவுள்ளது. மறுமையைக் குறிப்பதாலே, இம்மையிலே ஒருவனாற் செய்யப்பட்டதன்று.

வேதமானது ஆறங்கங்களையும், ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தருவவேதமென்ற மூன்று துணைவேதங்களையும் கொண்டுள்ளதாய் எப்பொருளுந் தன்னகத்தே அடங்கப் பெற்றதாய், ஆதியுமந்தமுமின்றி நித்தமா யோரியல்புடையதாய் இருப்பது.

படைப்பு முதலிய செயல்களும் செயல்முறைகளும், அவற்றைச் செய்யுந் தெய்வங்களும் பொருள்களும் பலதிறப்பட்டவை. அவற்றின் பல்லியல்புகளையும் வேதம் கூறும்.

காலமுறையினையு மக்களினத்திற்கு முறை அருவமாய நிலைய வேதம், அவற்றையறிந்த மக்கள் நெஞ்சிற் பொருந்தி உருவாய்ப்பட்டு உலகிலே வழங்கும். அங்ஙனம் வழங்குங் காலே, பகுதி, விகுதி முதலிய உறுப்புக்களையுடைய பதங்களையும் பதப்பதங்களையும் தொடர்ந்த விதிகளையும் உண்மைகளையும் இயம்பும். வேதம் விதித்தபடி ஒழுகினால், பாதுகாப்பும் பெருஞ்செல்வமாகிய வீடு அடைதல் கூடும். பாசத்தளையும் நீக்கலாம்.

கிளர்ச்சியுடைய இவ்வுலகமானது ஒருகாலத்திலும் ஒடுங்குவதாவது, மீளஉளதாதலாவது உடையதன்று. பழைமையா மொருவனை யுடையதன்று. அநாதியே உயிர்களின் தொடர்புற்று, நீக்குதற்கரிய வினைகட்கேற்ப இயைந்து நின்று, நில முதலிய பூதங்களாக விரிந்து என்றும் உளதாயிருப்பதே உலகம்.

உயிரானது அழிவற்றதாய், வியாபகமுடையதாய், அறிவுடையதாய், புத்தி முதலிய கருவிகளின் வேறாய், அழுக்கற்றதாய், அருவமாய்ப் பண்டை வினைக்கேற்ப உருவெடுப்பதாய், ஐம்பொறிகளாற் பொருள்களை யறிந்து நிற்பது.

டமையில் வந்தவேறு பொய்மொழிகளும் இறைவனுடை யனவே.

வேதம் தானே உண்டானதன்றி ஒருவன் சொல்லன்று என்றாய், வானிடத்தே யெழுந்த ஓசையிலே அது அமைந்த தாமெனில், அது எழுத்தோசையன்மையின், சொல்லும் பொருளும் விளங்காத கிழப்பட்ட ஒலிகளுடையதாக வேண்டும்.

வேதம் பிறவற்றை விளக்கித் தன்னையும் விளக்குந் தன்மையுடைத்தெனில், வானிருந்த பறை வனிருந்துபட்ட வற்றையே விளக்குவதாய், அதற்கு மேற்பாலவற்றை விளக்காததாய், ஒலிகளிலேயே ஒடுங்கப்பட்டதாம். அக்கருத்து நிரீசுவர சாங்கிய நூலியற்றிய கபில முனிவரின் கருத்து முடியும்.

வேதம் அருவாதலும் உருவாதலும் எவ்வாறறிய முடியும்? எது கொண்டு வேதம் அத்தன்மையதாகுமென்றதனை நீ தெரிந்தனை? உனக்குத் தோன்றியபடி நீ சொல்லுவது பிரமாணமாகாது.

வேதம் யாதாவது ஒலி வடிவை எடுத்து வருமெனில் தேரையின் சத்தத்திலும் உள் வேதம் உருவெடுக்கலாம். வேதம் தன்னைச் சொன்னவன் இன்னானென்று கூறாமை யாலே, வேதம் தானே வேண்டிய உருவான பினை நாடி அதனை மேற்கொண்டு வருமெனின், பலவாணிகரெழுவார் ஒரு தீவின்கண், பல நிற ஆடைகளைக் கண்டபோது அவற்றை ஒரு கைக்கோளன் நெய்ததென்னில், ஒருவனை யுந் தீவின்கட் காணாமையால், அவை தாமே உருவெடுத்து வந்தன என்பாயா?

நாற்றிசையினுள்ளாரும் ஒரு தலைமையாக வேதத்தை யோதி வருதலால், அது என்று தோற்றியதாய் நிறைவுடையதென்றால், எல்லாவிடத்திலும் படைகள் பல உளவாயிருத்தலைப் பற்றி, அவை தாமாக எங்குமுண்டாயின என்று கருதாது, அவற்றைச் செய்தானொரு கொல்லனுளனென்று கருதல்போல, குற்றமற்ற நன்மொழிகளாயிவையுந் நூலியற்றுவானொருவன் வேண்டுமென்றறிக.

மாலை கட்டுதற்குரிய மணமலர் முன்னே யுள்ளது. அவ்வாறே பொருட்சொற்கள் முன்னே யுள்ளன. அவற்றைத் தொடுத்துரைப்பதே உயிர்கள் செயலாமெனவிடின், அத்தகைய பொருட்பேறுடைய சொல்லமைவுகள் தனியே காணப்படுமாறில்லை. கடலொலி போன்றவையே இயற்கையா யுள்ளன. அவைபோல நின் வேதமுங் கருதப்படலாமா?

உடலில் நின்று உயிர்களாகிய நாம் உணர்வது போல, உலகங்களை யெல்லாந் திருமேனியாக உடைய முதல்வன் இயம்பிய வாய்மொழியைத் துணையாகக் கொண்டு உயிர்கள் தங்கடமைகளை யாற்றுவர். முதல்வன் சயம்புவாதலினாலும் அநாதியாதலினாலும், அவன் மொழியும் சயம்புவாய் அநாதியென்றுங் கூறப்படுகின்றது. இது உபசாரம். அது, அரசனை மதிக்குங் குடிகள் அரசன் கட்டளையைத் தாங்கிய வோலையைத் திருமுகமென்று கூறுதலை யொக்கும்.

ஆரிய வேதமானது வேதியர் முதலிய முதன் மூன்று வருணத்தாராலோதப்படுதலின், சோதிட முதலிய அங்க நூல்கள் எல்லார்க்கும் பொதுவானவையல்லவோ? வட-பாகத்திலே சாதி வேற்றுமை கருதாது, எல்லாரும் ஒப்பவே யோதுவது எது? அதுவும் இந்த வேதந்தானே. ஆதலால் வேதமெனப்படுவது யாவர்க்கும் பொதுவாகவே கருதப்பட

வேண்டும். அதற்கு மூல ஆசிரியனில்லையென்று கூறுதல், பிறந்த பிள்ளைக்குத் தந்தையில்லையென்றியம்புவது போலாம்.

அறிவுந்தன்மை உடம்பினுறுப்புக்களுக்குளதாயின், அவையழியும்போது அவற்றோடு சார்புற்ற உயிர்களும் அழிந்துபோம். உயிர் வந்து உடம்பைப் பொருந்துதலில்லையென்பது நின் கொள்கையாயின், இரண்டையுங் கூட்ட வல்லானொருவன், கூட்டுங் குறிப்போடு கூட்டுதலன்றி, உடம்பு உயிரைச் சென்றடையமாட்டாது. கார் காலத்திலே வித்திலே நின்று முளைப்பதெல்லாம் வேனிற் காலத்தே ஒருங்கு அழிந்துவிடும். அது போலக் காலத்தால் முத்தொழிற்படுகின்ற உலகம் தோன்றிக்கெடுந்தன்மைத்து; அது என்றும் ஒரு தன்மையதாய் நிலைபெறுதலின்று.

உயிர் எங்கும் நிறைந்திருப்பதாயின் நித்திய கன்ம நெறியிலே நின்று விண்ணுலக முதலிய இடங்கட்குப் போய் வரவேண்டியதில்லை. பூவின் மணம்போல உடலிலே உயிர் நிறைந்திருக்குமாயின், பூ அழிந்தால் மணமுமொழியும். மணம் தனியே நில்லாது. நீ சொன்ன உவமை பொருந்துமாயின், உடம்பை நீத்த உயிர் தனியே நிற்றல் எவ்வாறு? பெருஞ்சித்தி வல்லார் கூடுவிட்டுக் கூடுபாய்வதை அறியாயோ? மறை கூறிய உண்மையை நன்கறியாமையின், உவமை சொல்லினர்க்கு மலைவினை விளைப்பதாயிற்று.

உடலுடன் செய்கின்ற வினை அழிந்தொழியின், அது மேற்பிறவிக்கு வித்தாவது எப்படி? வயலிலிட்ட உரம் கெட்டு அதன் சத்தி நுட்பமாய்ப் பயிரிற் பொருந்திப் பயன் தருதல் போல, வினை, தூலமாய் உடலோடு கெடினும், நுட்பமாய உயிருடன் பொருந்தி நிற்குமெனில், அது உண்டு உண்டே

கட்டு நீங்குவோன் யாவனெனில், உலகத் தொடர்பாய கட்டுண்டாகிய முதலவனே. அவன் பணியாற்றலாகிய நெறியில் நின்று தொண்டு செய்து உன பாரத்தை இறைவனருளாலே நீக்கிக்கொள்வதே.

---

## பாஞ்சராத்திரி மதம்.

---

இதுகாறும் விதந்தோதி மறுக்கப்பட்ட மதங்கள் கடவுளுண்மையை மேற்கொள்ளாதன. பாஞ்சராத்திரமதம் கடவுளுண்மையை மேற்கொள்ளினும், கடவுள் இலக்கணத்தை நன்கறியாததாகும். பாஞ்சராத்திர மதத்திற் கூறிய வைணவமே சித்தாந்த நூலுள் விதந்தோதி மறுக்கப்பட்டது. அதன் கொள்கை வருமாறு:— எவற்றிற்கும் ஆதியாய் அருவமாகிய அளவிறந்த முழுமுதலாய, ஞானசோதியாய நின்ற திருமால், உயிர்களைக் காக்கக் கருதித் தன் விருப்பப்படியே மீன முதலிய திருமேனிகளை யெடுத்ததும், நீடுமிந்த கருணை காரணமாகத் திருப்பாற் கடலிலே பள்ளி கொண்டதுந் தவிர, வேதத்தையு மருளிச் செய்தான்.

தனது உந்திக் கமலத்திலே அயனைப்பெற்று, அயனாலே உலகங்களைப் படைப்பித்து, படைத்த உலகை அழிப்பதற்கு அரனையும் படைத்துக் காத்தற் கடவுள் தானேயாய முத்தொழிற்கு முதல்வனாய் விளங்குகின்றான். உலகைப் பாதுகாப்பின்பொருட்டு, அவன் மீன், ஆமை, பன்றி, நரசிங்கம், வாமனன், பரசுராமன், தசரதராமன், பலராமன், கண்ணன் என்னும் பல அவதாரங்களை எடுத்தனன். இனிக் கலியுகத்திலே, குதிரை யவதாரமு மெடுப்பான். இவ்வவதாரங்

சூரபன்மனுக்கு அஞ்சித் திருமால் திருப்பாற்கடலை விட்டுப் பரமசிவன்பால் அடைக்கலம் புகுந்தபோது முருகப் பிரானால், அவனைக்கொல்வித்தும், விண்டு முதலிய தேவர்கள் தாரகனுக்கு அஞ்சியகாலை, காளியினால், அவ்வசுரனைச் சேதிப்பித்தும், திரிபுரத்தசுரர், சலந்தரன் முதலியோர்களைத் தாமே வென்றடக்கியும், இறைவனே விண்டுவினுஞ் சிறப்பாக உலகங்காத்தலை யென்றறிக.

பார்த்தன் தனது உறவினரைக் கொல்லமாட்டேனென்றபோது, அவனைச் சூழ்ச்சியாற் போர்க்கு இசைவிக்கக் கருதித் தன்னைப்பரம்பொருளாகக் கண்ணன் கூறினமை பற்றி, அவன் முதல்வனாவனெனின், திரிபுரத்தசுரர்களை வஞ்சிப்பான், விண்டு நாத்திகநூலை அவர்களுக்குச்செப்பியதாகப் புராணங்கூறுகின்றது. அங்ஙனமாயின், விண்டுசெப்பிய காரணம்பற்றி, அந்த நாத்திக நூலை நீ கைக்கொள்ளுவாயாக.

மாயையானது உயிர்களாக மாட்டாது. உயிர்கள் மாயையாகமாட்டா. இறைவன் இவ்விரண்டுமாகான. விண்டு இறைவனாயின் மாயையாகவும் உயிர்களாகவும் திரிபுறமாட்டான்.

அவ்வாறே இறைவன் இரண்டறக்கலந்து நிற்றல்பற்றி, அவையாகத்திரிபுற்றானென்று கூறுதல் தவறு. பாசத்தை விட்டுப்பதியை அடைதல் முத்தியென்று அருள்நூல்கள் கூறவும், அஞ்ஞானமாகிய பாசமாகவும், அதனோடுகூடிய பசுவாகவும், தூயதன்மையுடைய முதல்வன் ஆவானென்று கூறுதல் பிழைபாடுடையதென்றறிக.

அரியும் அயனும் அடிமுடி தேடியறிதற்கரிய இறைவனை முதல்வனென்று கொள்ளாது, தேடிய இருவருள் ஒருவரைக்கடவுளென்றல் எவ்வாறு பொருந்தும்?

பிரமத்தின் ஒரு சிறு பகுதி சடவுலகமாயிருப்பின், உலகம், மாயையிலே தோன்றி நின்று மாயையிலே ஒடுங்கும். மாயை பிரமமாகாது. பிரமத்திலே அவ்வுலகு ஒடுங்கித் தோற்றுமென்னில், பிரமத்தின் ஓர் பகுதி சடமென்பது முடியும்; பிரமமாகிய நீயுஞ் சடமெனப்படுதாம்; ஆகவே உயிரு முலரூப நிலையாத சடமென்பது முடியும்.

வித்தினிடத்தில் மரந்தோன்றி வளருதல் போலப் பிரமத்தினிடத்தில் உலகம் உண்டாகுமென்னில், மரந்தோன்றுமாறு தான்கெட்டு மீள மரத்திற் றோன்றும் வித்துப்போல, பிரமத்தில் உலகமுண்டாக, மீண்டும் உலகத்திற் பிரமமுண்டாமெனக் கருத இடமுண்டாம். அங்ஙனங் கூறுமிடத்து உலகத்திற்குரிய தோற்றக் கேடுகள் பிரமத்திற்றுங் கூறவேண்டும். மேலும், வித்தும் மரமும் முளைப்பதற்கு ஆதாரமாகிய நிலம்போலப் பிரமத்திற்கும் பிரபஞ்சத்திற்கும் ஆதாரமாகவுள்ள அடிப்படையாது?

பொன்னானது சூடகம், கடகம், மோதிரம், சவடி, தோடு, ஆரம், முடி, அரைஞாண் முதலிய பல அணிகலன்களாக மாறியும், தன்றன்மை கெடாதவாறுபோலப் பல வகைப்பட்ட உலகப் பகுதிகளாகப் பிரமம் பொருள் திரியினும், அது தன்றன்மையிற் கெடாதென்னில், பல பணிகளாகிய பொன்னே அப்பணிகளைச் செய்வோராகவும் அணிவோராகவுந் திரிந்து நிற்குமா? உலகத்தைப் படைப்போனும் நடத்துவோனும் உலகின் வேறாகவுளனென்றறிக.

அறிவுஞ் செயலும் படைப்பமைந்ததால், வீடடைதல் முடியாது. அவ்விரண்டுமுடைய பிரமத்தை அடையப்பெற்று, உயிர்க்கேடில்லையென்றாய். அறிவுஞ் செயலும் இல்லையாயின், உயிருமில்லையாம். அப்போது பிரமத்தைக் கூடுவதுயாது?

நெல்லிலிருந்து அரிசி தோன்றுவதோடு, நிறத்தாலுந் தன்மையாலும் வேறுபட்ட பொரியுந் தோன்றுவது போல, ஒரு சொல்லினின்றே பல பொருள்களுந் தோன்றுதல் கூடும். சொல்லைக் கூறியவுடனே பொருளும் புலனாதலால், சொல்லே பொருளென்று துணிக. சொல்லும் பொருளும் ஒருங்கு புலனாவனவெனில், சொல்லில்லாமற் புலனாதலாற் சொல்லிற்கு வேறாயுள்ள பொருள் யாதுமில்லை.

## சத்தப்பிரமவாதி மதமறுதலை.

ஒலியானது மயக்கத்தால் உலகமாயிற்றென்றால், எல்லாம் ஒலியினின்று வந்தனவென்றதற்கேற்ப, மயக்கமும் அவ்வொலியினின்றே யெழுந்ததா? ஒலிக்கு வேறாயுளதா? பொருளுக்குஞ் சொல்லிற்கும் வேறுபாடின்றாகக் கூறுங் கொள்கை, சொல்லுலகம் வேறு பொருளுலகம் வேறெனக் கூறும் வேதாந்தத்திற்கு மாறாகும். அங்ஙனமாயின் நினக்கு வேதம் பிரமாணமாதல் எப்படி?

சொல்லானது அருவமாயிருப்பது. அது உருவாய்த் திரிபுறுதற்குக் காரணம் நினையாது. பால், கட்டித் தயிராயினாற் போல, சொல், திணிந்த பொருளாமெனின், தயிர் பாலாக மாறாமை போலச் சொல்லானது பொருள்வடிவடைந்தபின், அப்பொருள் மீட்டுஞ் சொற்றன்மையடையாது, பொருளாகவே நின்றழியும்.

சொல், திரண்டு திரிபுற்றாலும், பொருளாகத் தோன்றினும், தன்றன்மை யழியப்பெறுவதாமென்று கூறின். எந்த இடத்திலும் பொருள் காணப்படுதலின், எங்கும் சொல் அழிவடைந்ததாம். உண்மையாக நோக்கின், நீரென்றவுடன், நீர் புதிதாக உண்டாய்விடுவதில்லை. ஆதலால், சொல்பொருளாய்ப் பரிணமிப்பதில்லை. சொல், பொருளாகத் தோன்றுமெனின்,

தீ யென்றவுடனே வாயில் நெருப்புத் தோன்றி, வாய் வேக வேண்டும். இரண்டுமின்மையின், பொருளைக் குறிக்கற்குரிய பெயராகச் சொல்வழங்குவதென அறிக.

சொல்லைப்போல அதன் பொருளுக்கும் உருவமில்லை யென்ற காரணம்பற்றிச் சொல்லே பொருளாமெனின் அரி யென்ற சொல், குரங்கிற்கும் திருமாலுக்கும் பொதுவான சொல்லாதலைப்பற்றித் திருமாலைக் குரங்கெனலாமா? மேலும், நெருப்பின் சாம்பற் பொரியாகும். காணுதலே பொரியாகாது. ஆதலால், அது சொல், பொருளாக மாறுதற்குவழியாகாது. சொல்லின் பல பொருள்களை யறிவது கல்விக்கேற்பு. அறிவாற் பொருளறியப்படுதலின், சொல்லினும் பொருளே சிறப்புடைத்து.

அறிவாலறியப்பட்ட பொருளுக்கே சொல்லாகிய பெயர் ஏற்படுகிறது. அப்பெயரினாலே பின் காணப்பட்ட பொருளை அறிகிறோம். நன்றாய்க் காணப்பட்ட பொருளினுடைய அவ்வப்போது பேசப்படுகிற ஒலியாகிய சொல்லே அழிவுடைத்து. சொல் காரியம் போல்வது. பொருள் காரணம் போல்வது. காரியத்திற்கு அழிவு கூறுதலுண்டேயன்றிக் காரணத்திற்கு அழிவு பகர்வதில்லை.

ஒரு பொருளை உயிரறியும்போது அறிபொருள், பொறி, கரணம், மூலப்பகுதி, மறைப்புச் சத்தி என்னு மிவை கூடி அறிவு நிகழ்கின்றது. அப்போது பொருள் தோன்றுமேயன்றிப் பெயர் புலனாவதில்லை.

இருளிற் பொருளைத் தெரிவதற்குத் துணையாயுள்ள கை விளக்குப்போலச் சொல்லும் பொருளையறிதற்குத் துணைபுரியும். அது பேச்சளவில் நின்று மறைவது. நிலையில்லாதது. அது இறைவனாலே ஆக்கப்பட்டவற்றுளொன்று.

சிவஞான சித்தியார் பரபக்கம் முற்றிற்று.

# சங்கற்ப நிராகரணம்

---

இந்நூல் இயற்றியருளிய உமாபதிசிவம், இந்நூற் காரணமுங் காலமும் தெரித்தருளியவாறு வருமாறு:— சிவபெருமான், குழந்தைகளுக்கு அவ்வப்பருவங்களுக்குத் தக்க அறிவைப் புகட்டும் பெற்றோர் போல, மாறுபட்ட அறிவின் எல்லைகளுக்குத் தக்கவாறு அருளிய நூல்கள் எண்ணிறந்தன. அவை பலப் பல சமயங்கட்குரியன. ஒவ்வொரு சமயத்தாரும் தத்தங் கொள்கையே சிறந்ததென வாதிக்குங்காலை, அவை திருவருள் பெறாதவர்கட்கு மயக்கம் விளைக்கும். அவை ஒரு புறம் இருப்ப, உட்சமயங்களாறும் தனித்தனி சிறப்புடையன. சைவசித்தாந்த சிறப்பாக இறைவன் அருளிய அருள் நூல்களும் பலவே. அவையெல்லாம், ஆடகம், சமணியம் முதலிய வெவ்வேறு பெயர் பெற்ற பொன் ஒன்றேயாதல் போல, ஒரு தன்மையனவாய பதி பசு பாசம் விளக்குவனவே. இவ்வாகமங்களைக் கற்றுணர்ந்த ஆசிரியர்கள் எண்மர், சாலிவாகன சகாப்தம் 1235ம் ஆண்டிலே, தில்லையிலே ஆனித் திருவிழா ஆறாம் நாள் தேர் மண்டபத்தில் வரிசையாயிருப்பவும், மாயாவாதி ஒரு புறம் இருப்ப, ஆசிரியர் மெய்கண்டாருள் பெற்ற ஒருவர் அருகிலே வீற்றிருப்ப, கதியடையக் கருதிய ஒருவன் வீட்டிற்கு நன்னெறி யாதென்று வினவ, மாயாவாதி தன்மதங் காட்ட, அவனை மறுத்து எண்மருள் ஒருவர் தம்மதங் காட்ட, அவர் கொள்கையைப் பிறர் மறுக்க, இவ்வாறே மாயாவாதியும் எண்மரும் இயற்றிய வாதத்தைக் கேட்ட ஆசிரியர் மெய்கண்டார் மாணவர் அவர்களது கொள்கையின் குற்றங்

பொன்னானது பல அணிகளாய் விளங்கிய தன்மைபோல, பிரமமே, ஐம்பூதம், அறுவகைத்தாது, ஐங்கோசம், முதலிய யாக்கைப் பகுதிகளாகத் தோன்றும். தூயசிப்பியானது வெள்ளிபோல விளங்கும். அதுபோலத் தோற்றமாய உலகம் நிலைபெற்றதாகப் புலனாம். இருள் நிறைந்த இரவில், ஒரு புறத்தே கிடந்த கயிறு பாம்பெனத் தோன்றும். ஞாயிறு உதித்தவுடன் பாம்பென்பது இல்லையாகக் கயிறென படவிளங்கும். அதுபோல மாயகத்தால் உதயமான ஞானி பெற்ற பொருளாய்த் தோன்றும்; குற்றமற்ற ஞானம் உதித்தபோது, அறியப்பொருளாய பிரமமே உண்மைப் பொருளென்பதும், உலகச்செயலெல்லாம் பொய்யென்பதும் புலனாம். சிப்பியையும் வெள்ளியையும் தெரிப்பியிட்டால், சிப்பி எதிங்கொழிய வெள்ளி நிலைபெறும். ஞானம் உதித்த போது ஞானம் பொய்யாதொழிய, பிரமமே நிலைபெறும். உலகம் பிரமமே யென்னுந்தன்மைத்து; எதனாலெனின், உலகிற்கு முதற்காரணமாவதொன்றே பிரமமே. உலகம் தானே உதயமின்றி நிலைபெறும், முழுதும் இல்பொருளாயிற் றோன்றாது. அதற்கு ஒருமுதற்காரணமே வேண்டும். உள பொருள் பிரமமொன்றே. ஆதலால் அதனைக்காணின்றே உலக முதல்பரமாம். உலகிற்கும் பிரமத்திற்கும் வேறுபாடியா தெனில், சிலந்திப்பூச்சியானது நூலினைத் தன்வாயாலாக்கி வைத்துக்காப்பாற்றிப் பின்பு அந்நூலழியும்படி விழுங்குவது போல, பிரமமும் உலகத்தைத் தன்னிடத்தினின்றுந் தோற்று வித்துக் காத்து முடிவில் அதனை இலயமாக்கும். அதனால் உலகத்தின் அமைவு பிரமத்தினின்றாயதே. சிலந்திப்பூச்சி யின் நூல் ஒரு தன்மைத்து, உலகம் பலவகைத்தெனின், இலை, கனி, பூ, கோல், நார், காழ்ப்பு, முதலியவெல்லாம்

றிக் காரியம் நடத்திக்கொள்வதுபோல நாமும் இறைவனுக் குக் கீழ்ப்பட்ட அதிகாரத் தெய்வங்களை வழிபடு முறையை இறைவன் அத்தகைய சொற்களால் அறிவுறுத்தினன் என்றறிக. இறைவன் பிறரைத் துதிப்பது கனவிலுங் கிடையாது. அவன் தன்னை வேதத்துள் துதித்தல் எவ்வா றெனில், பக்குவப்பட்டவர்களுக்குத் தன்னை வழிபடும் முறையை அது காட்டுவதாகும் என்றறிக. மேலும், இறை வன் தன்னைப் பற்றித் தனக்குச் சொல்லவேண்டியதில்லை. உடம்பிற்குச் சொல்லுதல் பயனிலாதது. ஆதலால் பிறருக் காகவே அவன் தன் பெருமையை விளக்கினன் என்பது முடியும். முடியவே, அளவை, முதல்வனாகிய அறியப் படுபொருள், உயிராகிய அறிபொருள், உயிர்அறிவாகிய கருவியெனப் பொருள் நான்காதல் பெறப்படும். படவே நீ பொருள் ஒன்றேயுண்டென்றது நிலை பெறாது. இதனால் வேதம் ஒன்றுதான் உள்ளது; பிரமம்ஒன்றுதான் உளது என்ற கொள்கைகள் நில்லாதொழியும்.

இனி, கரும்பின்சுவை கரும்புக்கு வேறாக இருப்ப தில்லை. அதுபோல, பிரமமும் தன் ஆனந்தத்தைத் தனக்கு வேறாக உணர்வதில்லை யென்றால். சுவையிருப்பையும் சுவை யமைவையும் பகுத்தறியமுடியாத சடப்பொருளை அறிவுப் பொருளாகிய பிரமத்திற்கு எவ்வாறு உவமை கூறுதல் பொருந்தும்?

பிரமம் உலகமாகக் காரியப்படுவது பொன்பணியானாற் போல என்னில், பொன்றானே பணியாகாது. அதுபோல பிரமமும் தானே உலகமாகாதென்பது முடியும். செய்வோ னைப்போலச் செய்யப்படுகின்ற பொருள் இருக்கமாட்டாது. குயவனைப்போலப் பாண்டங்கள் இருப்பதில்லை யென்னின்,

பாண்டங்களுக்கு முதற்காரணம் மண் ஆகுமேயன்றிக் குயவனில்லை. அதுபோல உலகிற்கு முதற்காரணமே பிரமத்திற்கு வேறாக உண்டென்பது கருதுமாறும்.

அந்த முதற்காரணமே உலகத் தோற்றத்திற்குப் போதும், முதல்வன் வேண்டியதில்லை யெனவாயின், செய்பவரில்லாமல் எப்பொருளும் செய்யப்படுவதில்லை யென்னும் உண்மைக்கு நீ கூறுவது முரணாம். சிப்பி வெள்ளியாகத் தோன்றுவதுபோல உலகம் தோற்றமாத்திரம் உளமயக்க மென்னில், அப்போது உலகம் படைப்பா ரொருவர் வேண்டியதில்லை. பிரமமான சத்து உலகமாயிற்றென்பதும் பொருந்தாது. பிரமம் உலகமாயிற்று, அல்லது உலகைத் தோற்றுவித்த தென்று நீ கூறுவாயானால், உலகம் பொய்த் தோற்றமே (மித்தை) என்று நீ கூறுவது பொருந்தாது. உன சம்பிரதாயத்தை நீ மறந்தவனாதல் வேண்டும்.

பிரமம் உபாதிகள் வசப்பட்டுத் தன்னைச் சீவனெனக் கருதி நிற்கும் விவகார நிலையில் உலகம் உள்ளதே; பிரமம் தன்னைப் பிரமம் என்றறிந்த பாரமார்த்த நிலையில் உலகம் இல்லதே என்னில், பாரமார்த்தமாயுள்ள பிரமத்தில் உண்டாகிய உலகமும் பாரமார்த்தமாக வேண்டும். அன்றெனின் உலகம் பிரமத்தில் தோன்றியதென்பதை நீ ஒப்பித்தல் வேண்டும். விட்டால் உலகம் எதனினின்று தோன்றியது என்று நீ காட்டவேண்டும்.

இனி, பாரமார்த்த நிலையிலுள்ள பிரமம் நீ யென்பது உன்மதம். நீ பிரமமானால், உபாதிகளினாலே நீ அறியாமை யுறுகின்றாய். ஆதலால், பிரமமும் அறியாமை யுடையதாக

வேண்டும். பிரமமும் அந்நகையதே யென்று நீ சொன்னாலு, பிரமம் அறிவாயிருப்பதென்ற மறைபுரையை நீ கைவிட்டவனுவை. மேலும் நீ, காட்சி, கருதல், உரை எனனும் பிரமாணங்களாற் பொருள்களை அறிவதுபோலப் பிரமமும் அவைகளாற் பொருளை யறியும் என்பது முடியும். முடியுமே பிரமம் வாக்கு மனத்திற்கப்பாற்பட்டது என்ற கொள்கை எவ்வாறு பொருந்தும்?

இனி, பொலபனிபான இடத்து, பனியிலே பொன் னிலம்பாற்று ஒருவடிவத்தாய் நிற்பதுபோல, பிரமம் உலகமான விடத்து, உலகத்தில் பிரமத்தன்மை எவ்வாறு நிலைபெறு மெனனில், அது சித்தாகிய சிலந்திபூச்சி சடமாயுள்ள நூலைத் தன்னில் உண்டாக்கியதுபோல, சித்தாகிய பிரமம சடமாய உலகத்தைத் தன்னிற் றேற்றுவித்தலென்றாய்.

சிலந்தியின் ரெழில் நூலைத்தோற்றுவித்தலே. அது அந்நூலை ஒடுக்குவதில்லை. உலகம் ஒருகாற்றோன்றி யொருகாலொடுங்குதலின பிரமம தோற்றுவித்தலை மாத்திரஞ் செய்வதில்லையாகலின், சிலந்தியுவமை பொருந்தமற்றதாகும். பிரமம ஒரு தன்மையாயிருக்க, பிரமத்தினுற் றேன்றிய உலகம் பல்வேறு தன்மையதாயிருப்பானேன என்னில், ஒருமரத்திற் றேன்றிய பூ, இலை, காய், பழம் என்பன வெவவேறியல்பினவாதலும, நீரில் திவலை, நுரை, திரை, குமிழி வெவ்வேறு வடிவினவாதலும் போல்வது அது என்றாய். அவைகள் சடத்தினின்று சடப்பொருள் விகற்பங்கள் தோன்றுதற்குதாரணமாவனவன்றி, சித்தினின்று சட விகற்பங்கள் தோன்றுதற்கு உவமையாகமாட்டா. வித்தில் நின்று இலை, பழம, விழுது முதலியனவுடைய ஆலமரம் தோன்றினுற்போல, ஒரு நுட்பமான சடமூலத்தினின்றே

அவை பிரமத்தைச் சேர்தற்கு ஏது எனின்? ஆகாயத்தில் மேகங்கள் வந்து பொருந்துதல் இயற்கையாதல்போல் என்னில், இயற்கையாக அவை விட்டுவிட்டும்வந்து பொருந்துமாதலின், நிலையான முத்தி உண்டென்று பேசஇடமில்லை. உபாதிகள் நீங்கப்பெற்றவர்களிடத்தும் அவை மீளவும வந்தடையும்.

மாயா உபாதிகளைப் பொருந்துதல் பிரமத்தின் விளையாட்டு என்னில், விளையாட்டுப்பொருள் விளையாடுவானுக்கு வேறாதல்போல, மாயாஉபாதிகள் பிரமத்துக்கு வேறாக உள்ளனவாகும். அவ்வாறாயின் அவை பிரமத்திற்கு வேறன்றாம் என்று கூறிய கொள்கையை நீ மறந்தவனாக வேண்டும். அல்லது சிலந்திதான் நூற்றநூற்கூட்டிற் சிக்கி வெளியே வர இயலாமைபோல நீ கூறுகின்ற பிரமமும் மாயா உபாதிகளுட்பட்டு வெளிவர இயலாது தலைமையும் அறிவும் இழந்ததென்று சொல்வாயாக. அவ்வாறாயின் மாயாபந்தத்துள் அகப்பட்ட பிரமத்தை அதன்கண் நின்றெடுத்துக்கொள்ளும் ஆற்றலுடையவர் அப்பிரமத்தின் வேறுவரின்றாது முடியும். தாமிரத்தின் களிம்பை அகற்றுச் சேர்ந்த குளிகை நீக்கினாற்போலப் பிரமத்தின் சிறந்த அறிவானது அதன் உபாதியைப் போக்குமென்னில், உபாதிப்பட்டும் பிரமத்தை சுத்த தன்மையும் தூய்மையும் அறிவும உடையதென்று நீ முன் கூறியது எவ்வாறு பொருந்தும்? மேலும், செம்பிற்கு வேறாகிய குளிகைபோலப் பிரமத்துக்கு வேறாகவே சிறந்த ஞானம் வந்துகூடும் என்று சொல்லவேண்டும். அவ்வாறாயின் நம்மைப் போல ஒருவனை நீ கூறும பிரமம் என்று சொல்ல வேண்டும். அப்படியானால் சைவக்கொள்கையை மிகுதியும் நீ உடையாய் என்பது முடியும்.

இனி, பலவகை மணிகளினூடுசென்று அவற்றைக் கோத்து நிற்கும் நூல் ஒன்றேயாதல்போலவும், பலநிறப்பசுக்களின பால் ஒருதன்மையாதல் போலவும், பல தண்ணீர்ப் பாத்திரங்களிற் காணப்படுங் கதிரவன் கதிர் ஒன்றாதல் போலவும் பலநீர் நிலையிலுள்ள நீர் ஒன்றேயாதல்போலவும், உடல்களும் உணர்வும் ஆவன வென்று கூறினை. பலவகைமணிகளும் தாமும் தாமாகக் கூடவில்லை. அவற்றை ஒருவன் கோத்தாற்போல, உன்னுடைய பிரமத்தையும் உடல்களையும் பொருத்தினவன் வேறொருவனாதல் வேண்டும். பால் அறிவிலாததுபோலப் பிரமம் அறிவிலாததாயும் பசுக்கள் அறிவுடையனபோல, உடல் முதலியவைகள் அறிவுடையன வாகவும் இருந்தால் நீ சொன்ன பாலும் பசுவும் என்ற உவமை பொருந்தும். பாத்திரங்களிற் பின்னம் ஏற்பட்டாலும் நீரிற் பின்னமில்லை யென்று நீ கண்டு சொல்லுவதுபோல, பிரமத்தையும் உடலையும் வெவ்வேறாகக் கண்டு சொல்லுவார் இல்லாதபோது, நீ கூறும் உவமையாற் பயன் என்?

கண்ணாடியில் நிழல்படுதல்போல, உடம்பில் பிரமம் பிரதிபலிக்குமென்னில், கண்ணாடியிற்படும் நிழலினும் கண்ணாடி அசைவுறுவதாயின், பிரமத்தின் நிழல்காரணமாக உடம்புவந்துபோதல் பொருந்தும். நிழலாற்கண்ணாடி சலிப்பது இல்லை. ஆதலால் அவ்வுவமை பொருந்தாது.

இனி, காந்தத்தின் முன்பாக இரும்பு தொழிற்படுதல் போல, பிரமத்தின் சந்நிதியில் உடம்பு தொழிற்படும் என்னில், பிரமம் அகண்டாகாரமாய் இருத்தலின் அதன் சந்நிதியிலுள்ள அறிவுடைப்பொருள், அறிவில் பொருள் ஆகிய எல்லாம் ஒருங்குதொழிற்பட வேண்டும். ஆனால் உடல்கள் தொழிற்படுவதுபோலக் குடம், ஆடை முதலியன

தொழிற்படுமென்க. மேலும், காந்தத்தையும் இரும்பையும் ஒருவன் சேர்ப்படுத்திய காலத்திற்றான், இரும்பு காந்தத்தைச் சேர்ந்திடும் ஆதலின், பிரமத்தையும் உடலையும் இணைத்துக் காரியப்படுத்த ஒருவன் வேண்டுமென்பது முடியும். காந்தம் இரும்பைத்தன்பால இழுப்பதேயன்றி விலக்க ஆற்றலுடையதன்று. பிரமத்தின் சந்நிதியில் உடல் கூடியும் பிரிந்தும் இயல்வதால், நீ சொன்ன உவமை பொருந்தாது.

இனி, கனவில் ஆபரணமுடையவன் விழித்தபோது, அந்த ஆபரணத்தைப் பொய்யாகக் கண்டது போலவும், புற்றினருகே கிடந்த கயிறு இருளிற் பாம்பெனத் தோன்றியது போலவும், அண்டங்கள் பிரமத்தினின்று தோற்றமாவனவன்றி உண்மையில்லை என்பாய். கனவில் அனுபவிப்பதும் நனவில் அனுபவிப்பதும் வினையின் பயன்களே. அவை நிலையிலாதிருத்தல் பற்றி அவை பொய்யென்று கூற இடமில்லை. நனவில் தூலவுடம்பால் வினைப்பயனை நுகரும் உயிர், கனவில் நுண்ணுடம்புகொண்டு அதனை அனுபவிக்கும் என்றறிக. மேலும், அறிவாகிய பிரமம், கயிற்றைக் கயிறென்றறியாது பாம்பென்று மயங்குதற்குக் காரணம் யாது? அத்தகைய பிரமத்தை முதல்வன் என்பதெப்படி? மேலும் கனவிற் காணப்படுவது பொய்யென்றும், கயிறு அஞ்சத்தக்கதன்றென்றுந் தெரிந்திருந்தும், கனவு கண்டாலும் இருளிற் போனாலும் அச்சமடையும் பிரமம் எத்தன்மையது? அங்ஙனம் மயங்குவதொன்றைப் பிரமம் என்பது எப்படி?

சிவந்த பூவொடு சேர்ந்த பளிங்கு செந்நிறம் காட்டினாலும் தன்றன்மையை இழவாமைபோல, பிரமமும் வினையை நுகர்ந்தாலும், தன்றன்மை மாறாதிருக்குமெனனில், வினைப்

பயன்கள் பலவாதலால் பிரமமுடைய புண்ணிய பாவங்கள் முத லியவற்றையும் அனுபவிக்க வேண்டுமென்பது முறையும். அங்ஙனமாயினை, பிரமத்திற்கு அறியாமையும், இருவினையும், அவற்றின்காரணமாக உடம்புங் கற்பிக்கவரும். இங்ஙன மாயின், கள்வனைப்பிடிக்கச் சிறைசெய்தற்கு அரசன் ஆணை இருப்பதுபோல, இருவினைப்பயனை ஊட்டுதற்கு இறைவன் வேண்டுமென்பது முறையும்.

உடலில் மூன்று வகையான அவத்தைகள் ஏற்படு கின்றன. அவற்றை யனுபவிப்பது யார்? பரப்பிரமம் அவ வற்றதாகலின், அது உடம்பிற் கட்டுண்டு அவத்தைப்படுவதற் கிடமில்லை. உடல் சடமாயிருப்பதால் உடல் அவத்தைப்படுமென் என்று சொல்வதற்கிடமில்லை. அந்தக்கரணங்கள் பிரிந்த இடத்துண்டாகிய மயக்கமே அவத்தையெனப்படும் என்றால் உடம்பில் முதன்மை பெற்றிருப்பது, அந்தக்கரணங் களோ? பரப்பிரமமோ? பரப்பிரமம் முதன்மை பெற்றிருந் தால், அவ்வறிவுடைப்பொருள்முன், அந்தக்கரணங்கள் மாறுபட்டு அடங்குதற்கிடனில்லை; அதனால் அவத்தைகள் நிகழமாட்டா.

உடம்பில் முதன்மையுடையன அந்தக்கரணங்களே என் னில், பரப்பிரமத்தின் சந்நிதியில் உடலியங்குவதென்று நீ சொல்லியது தவறாகும்.

உடலில்அகப்பட்டு நிற்கும் பிரமமே அவத்தைப்படு மென்னில், அவ்வாறு பிரமம்கண்டிக்கப்பட்டு நிற்குமா? பல கணிவழியாக நீட்டியவிரலில் ஒரு வண்டு கொட்டினால் அத னால் உண்டாகியகடுப்பு நீட்டியபகுதியளவிலே நின்றுவிடு மானால் நீ சொல்லியது பொருந்தும். அப்படியன்றிக் கடுப்பு

உடம்பு முற்றிலும் பரவுதலின், உடலிற் படும் அவத்தைக பிரமமுழுதும் பரவுதல் வேண்டும். அங்ஙனமாயின், உடலிற் பொருந்தும் பிரமமே அவத்தைப்படும் என்று நீ கூறுதல் பொருந்தாது.

கண்ணாடியிற் பிரதிபலித்த வடிவத்தின் கண்ணாடியில் ஒரு குறியைத் தோற்றாமல் அக்குறை கண்ணாடிக்குத் தெரியாமே பொறிய, உண்மைக் கண்ணிற்குத் தோற்ற வாராமை போல, உடம்பிற் பிரதிபலிக்கும் பிரமத்தின் பிம்பத்திற்குவருஞ் சுகதுக்கங்கள் உடற்கே ஏற்படுவன அன்றிப் பிரமத்திற் கில்லையென்னில், முன்னே சுகதுக்கங்களை அறிவு அனுபவிப்பதென்று நீ சொன்னதற்கு மாறாக, இப்பொழுது, உடலே அவற்றை அனுபவிக்கும் என்கின்றாய். அதுவன்றியும், அறிவே சுகதுக்கங்களை அனுபவிப்பது காட்சிப் பிரமாணத்தால் அறியப்படும். அதற்கு மாறாக, உடம்பு அனுபவிக்கும் என்று நீ கூறுதல் சுருதிக்கும், அனுபவத்திற்கும் விரோதமானதால் அது முற்றிலுந் தவறாகும். “சொல்லுதல் யார்க்கும் எளிய, அரியவாம் சொல்லிய வண்ணஞ் செயல்” என்னுந் திருக்குறளை நீ படித்திருக்கவேண்டும்: அனாதிகாட்சுக பரப்பிரமத்திற்கு நீ மாயாவாதிகளோடு உடன்பட்டு, ஆகாயத்தில் வீசுங் காற்றினைப் பிடித்து, அதற்கு விலங்கிட்டதுபோலாம்.

இனி, சிறந்த அறிவால் பிரமத்திற்கு மயக்கம் நீங்குதல் ஆகாயத்திலுள்ள மேகங்களை ஒரு வகைக்காற்றுத் தோன்றிச் சிதறப்பண்ணுவது போல்வதென்றாய். ஆகாயத்திலே காற்றிருப்பதுபோலப் பிரமத்திலேயே சிறந்த அறிவு முன்னமே இருக்குமாயின், இடையிலே மயக்கம் ஏற்படக்காரணமில்லை. அச்சிறந்த அறிவு, இடையிலே உண்டாவது என்

பொருந்தாது. ஒளியோடு கூடி ஒளியையும் இருளோடு கூடி இருளையும் அனுபவித்து இரண்டுமாகாத கண்போல ஒன்றானது. அறிவாகிய பதியோடு சேர்வதாகியும், அறியாமையுடைய பாசத்தோடு சேர்வதாகியுமுள்ள பசுவே அது என்றறிக.

பிரமத்தின் வேறாதலன்றியில்லை; பிரமமே பிரமமாயிற்றென்னிற் பயன்படாது: பிரமம் தன்னிடத்திலே தன்னைக் காணுமாயின், அது கண்ணானது தன்னிடத்தில் தனையு வைக்காணும் என்பதுபோலும். கண் தன்னையே தன்னிற்காணாமை போலப் பிரமந்தன்னிற்றன்னைக் காணாதென டாகுமுபடும.

பிரமம் தன் ஆனந்தத்தைத் தானே அனுபவிக்கும் என்றாய், பிரமம் உபாதிகளோடு கூடுமுன் தன் இன்பத்தைத் தான் நுகரவில்லையா என்ற வினாவிற்கு, கரும்புதன் சுவையைத் தானறியாததுபோலப் பிரமமும் தன்தன்மையைத் தான் அறியவில்லை என்றாய். அதனோடு இதுமாறு மல்லவா? உண்மையில், பிரமஞானத்தால் பரவாகியஉவர்க்கு முன்னில்லாத இன்பம் வந்தெய்தும் என்றறிக.

அது நீ ஆகின்றாய் என்ற மகாவாக்கியத்தின் கருத்து, பொருளொன்றே என்பதன்று. நீ ஆற்றல்பற்றிப் புலியாயினையென்றால் நீ புலியே; புலியின்வேறாக நீ இல்லையென்பது கருத்தாகாது. அவ்வாக்கியத்தில் ஆயினை யென்றது உவமையே குறிப்பது. ஒருவன் நான் நோயாய்க்கிடந்தேன் என்றால், அவன் நோயின் வேறல்லன் என்பது கருத்தாகாது. நானேபிரமம் என்றால், பிரமத்தோடு இரண்டறக் கலந்து நான் அதனின் வேறலாது நிற்கின்றேன் என்பது கருத்து.

வினை என்றிருவகைப்படும். அம்மையப்பன் உயிர்களுக்கு இருவினைக்கீடாகத் தனது அருளால் மாயையினின்று உடம்பு களைப் படைத்துக் கொடுப்பான். கதிரவனிடத்தே மேகந் சேர்ந்தபோது அதன் ஒளி குன்றினாற்போல, மலம் அறிவு டைய ஆன்மாவை உடம்பொடு பொருந்தியவழியும் குன்றுமாறு நிற்கும்.

இருவினைப்பயன்களை உடம்பின் வாயிலாக உயிர்க்குக் கடவுள் புசிப்பிப்பான். புண்ணியபாவங்களின் அனுப வம் சமமாக, அவை முற்றிலும் புசித்துத் தீர்க்கத்தக்க நிலை வந்தபோது, அருள்வீழ்ச்சியுண்டாம். இறைவன் திருவருட் டிருமேனிகொண்டு யாவருங்காணத் தோன்றி, அழுக்குப் புடவையைத் தூய்தாக்குதல் போல ஆன்மாவைச் சுத்தப் படுத்தி அறிவிப்பன். ஆன்மாவானது குற்றங்களெல்லாம் நீங்கப்பெற்று நீரும் நீரும் சேர்ந்தாற்போலச் சிவனொடு தன்னறிவுகூடப்பெறும். அதுவே அறிஞர் முத்தி யாமெனப.

## மறைப்பு

சுத்தமாயிருக்கும் உயிரின் அறிவைப் பாசம் எவ்வாறு பொருந்தும்? மாயையிலாகிய உடம்பு புண்ணியபாவங் களுக்கீடாக அமைவதாயின் புண்ணியபாவங்கள் உடம்பில் லாமல் எவ்வாறு செய்யப்படும்? ஆதலால், மாயாமலம் முன் ஏற்பட்டதா? கன்மமலம் முன்னேற்பட்டதா? அவைகள் உயிரைச் சேர்வதற்குக் காரணம் வேண்டும். வெள்ளையுடை யில் அழுக்கேறினாற்போல,இயல்பாகவே பாசங்கள் உயிரைப் பொருந்து மென்னில், முத்திபெற்றவரையும் பாசங்கள் போய்ப் பொருந்தவேண்டும். அப்போது முத்தியாற் பயன்யாது?

வினை என்று இருவகைப்படும். அம்மையப்பன் உயிர்களுக்கு இருவினைக்கீடாகத் தனது அருளால் மாயையினின்று உடம்பு களைப் படைத்துக்கொடுப்பான். கதிரவனிடத்தே மேகந் சேர்ந்தபோது அதன் ஒளி குன்றியிருப்பதுபோல, பந்த அறிவு டைய ஆன்மாவை உடம்பொடு பொருத்தியவழியும் குன்றுமாறு நிற்கும்.

இருவினைப்பயன்களை உடம்பினால் உயிர்க்கு இறைவன் புசிப்பிப்பான். புண்ணியபாவங்களிரண்டும் சமமாக, அவைமுற்றிலும் புசித்து ஒழிக்கத்தக்க நிலை வந்தபோது, அருள்வீழ்ச்சியுண்டாகும். இறைவன் திருவருட்டிருமேனிகொண்டு யாவருங்காண எழுந்தருளி, அழுக்குப் புடவையைத் தூயதாக்குதல் போல ஆன்மாவைச் சுத்தப் படுத்தி அறிவிப்பன். ஆன்மாவானது குற்றங்களெல்லாம் நீங்கப்பெற்று நீரும் நீரும் சேர்ந்தாற்போலச் சிவனறி வோடு ஒன்றுபடப்பெறும். அதுவே அறிஞர் முத்தி யாமென்ப.

## மறுப்பு

சுத்தமாயிருக்கும் உயிரின் அறிவைப் பாசம் எவ்வாறு பொருந்தும்? மாயையினாலாகிய உடம்பு புண்ணியபாவங் களுக்கீடாக அமைவதாயின் புண்ணியபாவங்கள் உடம்பில் லாமல் எவ்வாறு செய்யப்படும்? ஆதலால், மாயாமலம் முன் ஏற்பட்டதா? கன்மமலம் முன் ஏற்பட்டதா? அவைகள் உயிரைச் சேர்வதற்குக் காரணம் வேண்டும். வெள்ளையுடை யில் அழுக்கேறினாற்போல, இயல்பாகவே பாசங்கள் உயிரைப் பொருந்துமென்னில், முத்திபெற்றவரையும் பாசங்கள் போய்ப் பொருந்தவேண்டும். அப்போது முத்தியாற் பயன்யாது?

## பாடாணவாதி சங்கற்பம்.

---

உயிர்களின் மூலமலமாகிய ஆணவ மலந்தனைப் போக்கு வதற்கு மாயை அவற்றைப் பொருந்தும். உயிரின் வினைக் கேற்றபடி உடம்பை இறைவன் உயிர்களுக் கொடுப்பான். உடம்பைப் பொருந்தி உயிர்கள் இருவினைப்பயன்களை அனுப விக்கும். அனுபவிக்குமிடத்து ஆணவமல மறைப்பால் உயிர் கள் துன்புறும். கண் பார்வையைக் காசநோய் மறைத்தாற் போல ஆணவம உயிரறிவினை மறைக்கும். அதனாற் பிறவித் துன்பம மேன்மேலுளதாகும். அத் துன்பம் நீங்கித் தூக்கத் தில் மக்கள் துயரற்றுக் கிடப்பதுபோல, உயிரானது கட்புக் காணும அறிவு யாதுமில்லாமல் இன்பத் துன்பத் தொடர்ச்சியில் லாது கிடக்கும் நிலையே முத்தியாகும்.

### மறுப்பு.

பாடாணவாதியே, நீ கூறுமுத்தி ஆணவ மலந்தோய்ந்து கிடக்குங் கேவல நிலை போல்வது. ஐம்பொறி முதலிய கருவி கள் உயிரறிவுக்கு விளக்கந் தருவதால், உயிர்கள் கருவிக ளோடு கூடியபோது ஆணவமல மறைப்பு எவ்வாறுளதா மென்று, நீ விளக்கவில்லை. கருவிகள் நீங்கியபோது உண் டாகும் துன்பமும் நல்லதென்னலாம். கண்ணிற் படலத்தை மருந்தினால் நீக்கியகாலை, சுகம் உண்டாகுமென்க. கருவி களை விட்டுங் கூடிய காலை உண்டாகும் இன்பம் அதுபோல் வது. காட்சியில்லா நிலையும், இன்பதுன்பங்களில்லா நிலையும முத்தி நிலையாம் என்னில், மரணமடைந்தோரும் கருவை யடைந்தோரும மரமாக நிற்கப்பெற்றாரும், முத்தியடைந்த வராதல் வேண்டும். அத்தகைய முத்தி பெறுவிப்பதற்கு ஆசிரியன வேண்டியதில்லை. ஆணவத்தோடு கூடிய கேவல

நிலையில் அறிவு விளங்கப்பெறுந் துயரம் உள்ளதாகும். அது போலக் கலக்குப்போலக் கிடக்கும் நிலையினும் அத் துன்பம் உண்டென்றறிக.

---

## பேதவாதி சங்கற்பம்.

---

செம்பின் களிம்பு இரத குளிகையால் நீங்கிப் பொன் னென்னும் வடிவுபட்டாற்போல, தம்மைப் பற்றிய பாசங்கள் இறைவனருளால் நீங்கப்பெற்று, உயிர்கள் அழியாது, தூய முத்திநிலையை யடைவர். உயிர் பெறுவதனுடைய முத்தி பேறு மாக இருக்கும்.

### மறுப்பு.

எல்லா நூல்களும் பதி, பசு, பாசம் அழிவில்லாதன வென்று கூறிய உண்மையை மறுத்து, பாச நீக்கம் செம்பிற் களிம்பு நீங்குவது போல்வதென்று கூறுவது, சுருதிக்கு மாறு கும். இரத குளிகையாற் செம்பு தன்னிலை கெடுமிடத்தே செம்பு அழிந்து பொன் தன்மை புதிதாக ஏற்படுமாயின் பசு வென்னுந் தன்மை கெட்டுப் புதியதொரு தன்மை உண் டாகவேண்டும். அது உனக்கும் உடன்பாடன்று. செம்பு குளிகையும் ஆகாமல், தன்றன்மை கெட்டு பொன்னுந் தன்மை போல், பசுவுந் தன்னை அருளாக்கிய சிவ சொரு பம் ஆகாமல் தன்றன்மைகெட்டு வேறொரு தன்மையடைய வேண்டும். உண்மை அவ்வாறிலாமையின், உன் கொள்கை பொருந்தாது.

---

அவற்றைப் பசு கருவிகளின் உதவியின்றித் தானாக அறியமாட்டாது. ஐம்பொறிகள் சடமாகையால், அவை எதனையுந் தாமாக அறியமாட்டாதனவே. பதிஞானம் பேரறிவாகையால் எதனையுஞ் சுட்டியறிய வேண்டுவதில்லை. கருவிகள் நீங்கிய இடத்து, உயிர் செகத்திலே பொருந்தியிருப்பின், தனக்குள்ள முதல்வனை அது அந்நிலையில் அறியாதிருப்பதற்குக் காரணம் யாதுமில்லை.

இனி, முத்தியை நாடும் உயிர்க்கு ஓலையுட் படியாமற் கிடந்த பச்சைப் புழுவை உவமை கூறுதலும், ஞானோபதேசஞ் செய்யுங் குருவுக்கு அதனை உரையொன்றும் நிகழ்த்தாத வேட்டுவனை உவமை கூறுதலும் பொருந்துமாறில்லை. வேட்டுவன் எடுப்பதே உபதேசமெனனில், உபதேசங் காரணமாக உயிர் ஞானம் பெற்றுச் சிவசாரூபம் உற்றாற்போல, வேட்டுவன் எடுத்த காரணத்தால் மயிர்க்குட்டிப்புழு வேட்டுவனைப் போலப் பறவையாய் விட்டதென்று சொல்வாரில்லையே. புழு வண்டாதல் அச்சமுறிப் பிறத்தற்கு உவமையாகுமன்றி உயிர் முத்தியடைதற்கு அது உவமையாகாது. புழு நினைவாற்றலால் வண்டாயிற்றென்பது சாரூப பயன்தரும் யோகத்திற்கு உவமையாயினும் அது ஞானத்திற்கு உவமையாகாது. சிவசாரூபமடைதல் ஞானபயனென்று எனச்சொல்லுதல் கூடாதெனில், உயிருஞ் சிவமும் ஒன்றுபட்டிருப்பது ஞானமாமேயன்றி வேறுபட்டிருத்தல் ஞானநிலையாகாது. நீ சொல்லும் உவமையால் முத்தியில் இரு உடம்பு உண்டென்பது பெறப்படும். அப்போது உயிர் சிவத்தோடு கூடாதிருப்பதோடு, புழு உண்டானபின் அதற்கு முன்னுணர்ச்சியில்லாமையால் உயிர்க்கும் அறிவு மாறுபடும் என்பது பெறப்படும். அது ஞானத்திற்கு மாறாகும்.

யென்று நூல்கள் கூறவும், நீ சிவன் முத்தியே மேலான முத்தியெனறால் எப்படிப் பொருந்தும்? முத்திபெற்ற உயிர்களின் உடல் சுத்தமாயா சம்பந்தமுடையது, மயக்கந்தரும் அசுத்த மாயா சம்பந்தமுடையதன்றாதலின், நீ சொல்வது வேப்பமரத்தின் அடிக்கட்டை கசக்கும்; அதன் கொம்பு நுனிகளிற் கசப்பதில்லையென்று கூறுவது போலும். முத்தர் தாம் விரும்பிய உடம்பை எடுத்துக் கொள்ளுவரெனில், அவ்வுடம்பெடுத்தற்கேதுவாய மலமாயா கன்மங்கள் முத்தரை விட்டு ஒருகாலும் நீங்குவதில்லையென்பது கருத்தாகும். நீ சொல்லு முத்தி பத முத்தியே, பரமுத்தியாகாது என்றறிக.

---

## சிவசங்கிராந்த வாதம்.

உயிரானது நீங்காத ஒளியுடைய விளக்குப்போல உள்ளது. அதற்குச் சுட்டியறியும் அறிவு கிடையாது. இறைவன தனக்கென ஒன்றையும் அறியவேண்டிய காரணம் இல்லை. காந்தம் விகாரமில்லாது நிற்க, அதன் முன் இரும்பு தொழிற்படுதல்போல, விகாரமில்லாத உயிர் முன்னிலையில் பிராணவாயு உடலைக் காரியப்படுத்தும். காற்றில் நீர் இறைக்கும் பூட்டையின் பலபகுதிகளும் தொழிற்பட்டாற்போல, ஐம்பொறிகள் தமக்குப் புலனாகின்றவற்றை அனுபவிக்கும். அவற்றிற்கு முன்பாகப் புலன்களை அகக்கருவிகள் உணரும். அகக்கருவிகளின் உதவியில்லாமல், ஐம்பொறிகள் புலன்களைப் பொருந்தமாட்டா. பிராணவாயு பிரிந்தால், உடல் தொழிலின்றிக் கிடக்கும். இவ்வாறு உயிர் முன் உடல் தொழிற்படுங் காலத்தில், ஆணவமலம் நீங்குதற்குரிய பக்குவம் வந்தபோது, கண்ணாடியிற் பிரதிபிம்பந்

தோன்றுவதுபோல், இறைவனதுதிருவருள் உயிரினிடத்திற் பிரதிபலிக்கும். அப்போது விறகினிடத்தில் எழுந்தீயால், விறகு அழிவது போலவும், உப்பளத்திற் போட்ட புல்லும் வைக்கோலும் தந்தன்மை கெட்டொழிவது போலவும், உயிர் தன்றன்மை கெட்டு அதன் வண்ணமாய் விடும். அதனாற் பசு கரணங்கள் சிவ கரணங்களாக மாறி உயிரறிவு இறையறிவொடு கூடி ஒன்றாய் விடவே, உயிர்க்கு யான் எனது என்ற உணர்ச்சி இல்லையாகும்.

---

## சிவசங்கிராந்தவாத மறுப்பு.

உயிர் விளக்குப் போலொளிர்வதாயின், அதன் கண் அறியாமையேது? அது அறிவிலதாயின், ஒளியென்பதற் கேது நிலைமை?

பிராணவாயுவே (உயிர்க்காற்றே) உடம்பை யியக்குமாயின், துயிலும்போது பிராணவாயு இயங்கியும் உடம்பு இயக்கம் பெறாமைக்குக் காரணமென்னை?

மனம், பொறி, புலன், இவற்றைத் தொடர்பு படுத்திக் காரியப்படுத்த உயிருஞ் சடத்தின்றன்மையை யுடையதாய்ச் செயலற்றுக் காந்தம்போலிருப்பதெனின், அறிவுப் பொருளின் றொடர்போ உடம்பிற்கு வேண்டியதின்றே.

பூட்டையானது அதிற் பூட்டப்பட்ட காளைகளால் தொழிற்படுதலால், நீ கூறும் உவமை செயலற்றிருக்கும் உயிர்க்குப் பொருந்தாது.

ஐம்பொறிகள் புலன்களை நுகருமாயின், ஐந்தும் ஒரே பொழுதிற் றத்தம் புலனை யொருங்கறியாமைக் கேது வென்னை? இலை, மலர், காய், கனியெனபன, ஒரு மரத்திலே

வெவ்வேறுகாலத் தானவாதல்போல, ஐம்பொறிகளும் ஒன்றொன்றாக ஒவ்வொருகாலத் தறியுமென்னில், ஒரு பொறி யறிந்ததன்பயனை மற்றொரு பொறி தெரியமாட்டாமையாலும், ஐம்பொறியுணர்வின் பயனை ஒருங்கு நுகருமுயிர் வேறுண்மையின், ஐம்பொறிகள் உணர்ச்சியுடையனவென்பது தவறு. மேலும், இருவருடைய ஓசையை இருகாதுங் கேட்டும், ஒருவர் செய்தியைத் தெரிந்தும் மற்றொருவர் செய்தியை அறியாதிருத்தல் காணப்படுதலின், பொறியினைச்சார்ந்தறிவது உயிரென்றாய்ந்துணர்க.

இவ்வாறே அந்தக் கரணங்களின் வேறாயும் உயிருளதே யெனத் தெளிக.

கண்ணுடைய உயிர்க்கு உவமைதான் பொருந்தாது. கொடுத்ததைக் கொள்ளுந் தன்மை உயிர்க்கில்லை. தீ விறகை எரித்துவிடுதல்போல திருவருள் உயிர்த் தன்மையைத் தொலைத்துவிடுதல் இல்லை. அங்ஙனமாயின் திருவருட்பேற்றினாற் பயனிலதாம். உப்பளத்துப் புல்லும் வைக்கோலும் உப்பின்றன்மை பெறுமேயன்றி ஒழிந்து கெடுவதில்லை. அங்ஙனம் கொடுத்ததைக் கொள்ளுந்தன்மை உயிர்க்கில்லை.

பசுவின் கரணங்களென்பன மாயையின் காரியங்கள்; அவை திரிபுணர்ச்சி பயப்பன. அவை திருவருளின்றன்மையை எவ்வாறறிதல் கூடும்? சடமாயவுடம்பு தன்னின் வேறுபட்ட இயற்கையுடைய திருவருளின் றன்மையைப் பொருந்தாது. அருளுருவம், மாயை இருளுமாகாது. பொறிகளினுதவியின்றி உயிர் திருவருளை யறியாதென்பது தவறு. அது எவ்வாறெனில், அது ஞானம் பெற்றார்க்கு விளங்குமன்றிப் பிறர்க்கு விளங்காது. அது ஒருவனு

பொருந்தியுங்கூட நுகர்ந்த இன்பத்தை அலியாயுள்ளா ரறி யாமைபோலுமென்க. "ஐம்புலன்காணாவாராய்," "கரணங் களெல்லாங்கடந்து நின்ற கறைமிடற்றன்," "ஐம்புலனில் அப் பாற்பட்டான்", என்ற திருவாக்குக்களின் பொருளை உற்று நோக்குக.

பசுகரணங்கள், சிவகரணங்களாக மாறினும், காரண ங்கள் கொண்டறியப்படுவன பரம்பொருளின் காரியங்களேயன்றித் திருவுருவாகாது.

அறிவும் உயிருமாகிய இருவேறுமுதல் ஒருமுதலாயி னன்றி அறிவு தோன்றாது. அங்ஙனம் இருமுதல் ஒருமுத லாதல் தற்காரியவாதத்திற்கிழுக்காம்.

---

## ஈசுர அவிகாரவாதம்

பல துளைகளையுடைய குடத்துள் இருக்கும் விளக்குப் போல ஒன்பது வாயில்களையுடைய உடம்பில் உயிர் அறிவாய் இலங்கும். ஐம்பொறிகளுள் ஒன்றழிந்ததைப் பற்றிநின்றறி யாமையின், அவ்வப்பொறிகளைக் கடந்தே உயிர் விடயங்களை நுகரும். உயிரானது பொறியின் வாயிலாகவே ஒன்றை அறிந்து நுகரும்.

மலபரிபாகம் வந்தபோது, இருள் வீட்டிலுள்ள ஒரு பொருளை எடுத்தற்கு விளக்கினை முன்னாக்கொண்டுகாணுமதுபோல, இறைவனது ஞானமாகிய விளக்கை அவனருளாற் பெற்று, நீர்போலவும் நிழல்போலவும் பொதுநிலையில் ஒரு வன்பாலுஞ் சார்பின்றி நிற்கும் பரம்பொருளைத் தம்மை யடைந்தார்க் கின்பங்கடருந் தலைவனை, வெயிலிற் சென் றோர் மரநிழலை அடைந்திருத்தல்போல, அடைந்த உயிர்கள் பேரின்பமெய்தும்.

தாதலினை, குற்றமற்ற அதனுடைய அறிவு திருவருளாலன்றி உயிர்க்கு அமைவதில்லை.

இருளில் விளக்கினைப்பயன் படுத்துவதுபோல, இறைவனது ஞானவொளி கொண்டு, உயிர்கள் உண்மையுணரு மென்பது பொருந்தாது. கருவிகள் அறிவிலன; அவை யொழிந்த உயிர் துரிய நிலையில் கிடப்பது. ஆதலின் அந்த நிலைய உயிர் முதல்வனது ஞானத்தைத்தானே யறிந்து பயன்படுத்துமென்றாய். அது குருடர் பலர் கூடிக் கண்மகவினைக் கொண்டு பெருவழியிற் சென்றார்களென்பதனோடொக்கும். நீரையும் நிழலையும்போல இறைவன் இருப்பானென்னின், அறிவில் பொருள்களாய அவைபோல, இறைவனை யசித்தின் நம்மையாட்கொள்ளாது தானிருந்தவா றிருப்பனென்பது போதரும். அங்ஙனம் ஆயிருந்தால் நாம் உய்தல் அரிது; ஆதலால் இக் கொள்கை தவறு.

---

## சுத்தசைவமென்ற சைவவாதம்

சகலநிலையில அறிவாய நிற்குமுயிர், கேவல நிலையில் அறி வற்றுக்கிடக்கும் ஆணவ மலத்தோடொன்றாகும். இறைவன் உடல் முதலிய கருவிகளைக் கண்ணுக்குக்காட்டாய விளக்குப்போல, உயிர்களுக்குக் கூட்டுவன். அவைகளைப் பொருந்தி, உயிர் இரு வினைப்பயனை நுகருங்கால், வரும் பிறவிக்கு வினையுந்தேடிக் கொள்ளும். பலபிறவிகளெடுத்து அலையுங்கால, மலபரிபாகமும் அருள் வீழ்ச்சியு முண்டாம். அப்போது அருள்வடி வாய முதல்வன் தோன்றி உயிர் செல்லுநெறிகாட்டுவான், சரியை, கிரியை, யோகங்களில் நிறுத்தி, அவைமுற்றித் தனி நிலையுங் கலப்பு நிலையும் நீங்கவே, நீங்காத உயர் ஞானத்தைத் தருவான். அப்போது தன்னையுந் தலைவனையும் அறிவையுந்

முற்றுணர்வாகும், ஐந்தொழில் இழுக்காமலல்லவா? ஒப்பற்ற அறிவு நிலைமையுடைய முதல்வன், மின்போலத் தோன்றி மறையும் உலகவொழுக்கங்களைத் தம்பொருட்டுச் செய்தா னென்றல் பழுது.

பிறர் பொருட்டு ஐந்தொழிலியற்றப் படுமென்னில், தனக்கு வேறுபட்ட பிறரும் அவர்க்கு வேண்டிய பொருளும் அப்பொருட் குரிய கருவியும், அக்கருவிக்கு முதற்காரணமும் செய்யப்படுமென்னின் ஐயமே கூறினை, நீ சிவமே யாவுமென்று கொள்கை நிலையடையும்?

இனி சித்தாகிய சிவம், அசித்தாகிய உலகத்தைத் தன்னிடத்தினின்றுந் தோற்றுவியாது. உலகமுஞ் சித்தே யென்னில், உலகில் அசித்து என்பதுதான் யாது? சித்தா யின், உலகிற்கு நிலையாமையில்லை யென்பதாம். உலகாய தரும், பூதக் கூட்டமானது நீர்க்குமிழி போல நிலையில்லாத தென்பர். நீ அந்நூலை நிலையாமையுள்ள உலகத்தை நிலையாய தன்மையுடைய சித்தென்பாய். நீ கூறுவது உண்மை யன்று.

இனி, சீனர், சாவகர் முதலியபிற மதத்தினரும், உடம்பில் ஓரறிவுண்டென்பர். அதனால் உயிருண்டென்பது போதரும். நீ உயிரின்றென்பதால், அவரினுமிழிந்த ஆராய்ச்சி யுடையாய். நீ கூறுவது காட்சிமுரண்.

நீ கூறுவதற்குச்சான்று பகர்வார் யாருளர்? சித்தின் சார்பால், உடம்புஞ்சித்தே யென்னில், சித்தாய சிவம் எங்கும் நிறைந்திருப்பதும், குடம், துணி முதலியனவும் உடம்பு போலத் திரிந்தலைவதின்றி வைத்த இடத்திற் கிடப்பதேன்? உயிர், இயங்கியற்பொருளிற் செறிந்திருப்பது போல, நிலை

களும் மாயை நின்றெழுந்தனவே. அருவமாய வடிவும் உருவமாயவடிவும், மாயாகாரியமே ஆகும். ஏதுமே ஆகாதென்பதில்லை யென்று கொள்ளுக உலகாயதனுடையது. அது ஞானிகளுக்கு ஆமெனில் கள், கொலை, களவு, வெகுளி, காமம், எனுமிவற்றைத் தவிர வேண்டும் என்றுதாரிலா. ஆயின ஞானிகளுக்கு இவற்றாற் குற்றம் ஏறாது என்னில், சோமபானம், சுராபானம், முதலிய செய்யன்மின் என்று நவை நால் கூறுகின்றது? மறையோன புலைச்சியைப் பருவளாமென்று சொல்லுவார் யார்? இவையெல்லாஞ் செயற்கைக் கட்டளையாமெனில் சாதிநீதி கொள்ளாவிடினும், இயற்கை விதிகளுள்ளனவே. எருமையைக்காளை விரும்பாது, பசுவையே அது விரும்பும். ஆதலால், ஞானிகளுக்குச் செயற்கைக்கட்டளையிலராயினும் இயற்கையாகத் தீயவற்றை உள்ளம் நாடாதெனவறிக. அவர்களெல்லாஞ் செய்யலாமென்பது கருத்தன்று.

கண்ணிணுருவும் கதிரொளியும் சிவன்சத்தி நாடகமென்னில், அதற்குக்காரணமும் பயனுங்கூறவேண்டும். நீ கூறுவது நான்முறைக்கும் உலகியலுக்கு மாறும். அறம், மறம், நன்மை, தீமை எனப்படுவதெல்லாம் பொய்யாம். சிவசத்தின்வேறாக உயிரில்லையாயின், அவற்றாற் பயன்யாது மில்லை

“தானேயுருவனுமே பலவாகி” என்றவிடத்து, ஆகியென்பது “ஆக்கி” என்றபொருளுடைத்தாதல் கூடும். அல்லது இறைவனது இரண்டறக்கலந்த நிலை கூறிய வாறாம். குயவன், குடம், சால்முதலிய எல்லாம் ஆயினனென்றற் பொருள்யாது? குயவன் அவையாகான. அவை குயவனாகா. இரண்டறக்கலந்த நிலை கூறுமிடத்து, வேற்றுமையுந் தெரிந்தவாறுகாண்க. பொன்னைப், மண்ணைப், என்றவிடத்து, பொன்னும், மண்ணும், வேறிருத்தலானே, அவற்றோடு கலப்

புக்கூறப்பட்டது. அவைதானே முதல்வனென்றிற் கவர் பினைப்பற்றிப் பேசவேண்டியதில்லை. உலகெலாம் இறைவன் திருமேனி யென்ற கருத்துங்கொள்க. முதல்வனை யன்றி ஒன்றுமியங்காதென்பது கருத்து. வினைப்பயன் உலகத்துள் அது நுகரப்படுதலுடன் இறைவனுலகத்தின், "காயத்தியமாறு மாகி" யென்ற சுருதி எழுந்தது. உலக மெல்லாவற்றையுந் தெளிவாக அறிவோனும், அறிதற்குரியார்க்கு அறிவிப்பவனும், அறிஞர்க்கறிவாய் நின்று அறிவானும், ஞானிகள் அறியப்படும் பொருளாய் நிற்போனும், இறைவன் என்றறிக.

கொடுப்பானுங் கொள்வானு மொருவனேயென்பவரில், நரகமென்பது கிடையாது, வேண்டியபோது புசிக்கலாம். நோயை நீக்கிக்கொள்ளலாம். அவ்வாறு உலகத்திற் காணப்படவில்லையே வேண்டியது வருவதில்லை, வேண்டாதவை நுகரவேண்டியவிதி ஏற்படுகிறது. நோய்கள் விடாப்பிடியாய் ஒழிவதில்லை. இவற்றால் வருந்துன்பத்தை உடையார் யார்? சிவமன்றெனில், உயிர்தானே அதனையுடையதாம்.

சத்தியுஞ்சிவமுந் தாம் எல்லாம் நுகர்கின்ற உணர்ச்சி யார்க்குளதாம்? சத்தி சிவங்கட்கே அவ்வுணர்ச்சி யுளதா? சத்தி சிவங்கள் உலகத்துன்பத்தை நுகருந்தன்மையுடையன வல்லவே. உலகை அறியுமிடத்துச் சுட்டியறியு மறிவு அவர்கட்கில்லையே.

எல்லாம் ஒன்றெனக்கூறும் நினக்கு நானென்னும் உயிரும், அவனென்னுஞ் சிவமும், நவையென்னுங் குற்றமும், நலன் எனனும் நன்மையும் உயிர்சிவனாதல் வேண்டு மென்பதும் இல்லை. சிவனொடுகலத்தலைச் சாயுச்சியமெனாறல், முப்பொருளுண்மை கொள்வோர்க்கே பொருந்தும்

தான் அறிந்த நெறியில் நிற்றலே முத்திக்கேதுவாமெனில், வீடடைதல் அரியதாகாது. உலகாயதனும், சித்தாந்த முத்தியெய்தலாமே.

சுவரின்றிச் சித்திரம் எழுதமுடியாது. கருவிகள்கழன்ற இடத்து உயிர் அறிவைப் பெறுதலெங்ஙனம்? கருவி கழன்ற அந்நிலையில் சிவனதிருஞானம் கலக்குமென்றல், இருளிற் கிடக்குங்குருடர்க்குக் கண்ணுடையான் விளக்குக் கொடுத்துதவிய தொப்பது போலாம். அங்ஙனம் அறிவை கலத்தற்கு இறைவன் வைதெரியாதவனல்லனே.

இனி, கருவிகளைக்கொண்டு அசத்தாய உலகினையறிந்து கொண்டிருப்பதைச் சிவஞானிகள் வேண்டமாட்டார். அவர்களே அவ்வாறிருப்ப, கருவிகளைக் கொண்டறியுமறி வெற்றெனவே யென்றனை. மாயாவாதிகள் உலகை யறியா வாதலின், அவற்றின் வாயிலாகப் புலனை யறிவது சிவமே யென்று கூறியது மாயாவாதிக்கு மொவ்வாது. எல்லா வற்றையுமறியும் பிரமம், கருவிகள் வாயிலாக அறிவதாக மாயாவாதி கூறுவதில்லை. மாயாவாதி பிரமத்தை அறி வென்றும் உலகம் நிலையற்றதென்றுங் கூறினன். நீ எல்லாம் சித்தேயென்பாய். அவன் கருவி பதினான்கும், அவத்தை மூன்றுங் கூறினன். நீ, சைவனாதலின், இருபத்திரண்டு கருவியும் ஐந்தவத்தையும் மும்மலமும் கடவுளுமுயிருமா வென்றுகொண்டாய். அவற்றையெல்லாம் விட்டு இப்போது எல்லாம் சிவமாயவொன்றே யென்று கூறுதல் தாயை, தங்கையை, தாதியர், தமக்கையர், ஆய எல்லாரும் விட்டுப் பார்வையாற் பெண்டிரே யெனக்காணுங் கழிகாமுகரது கொடுங்கொள்கை யொக்கும். உயிர்க்கறிவில்லை, பொறிவாயி

லாக அறிவானுஞ் சிவனேயெனக்கூறிப் பொறியறிவொழுகலை ஒழுக்கமாகக்கொண்டு, கட்டுநிலையிலும், முத்திநிலையினுமடங்கு அஞ்ஞானமுற்றாய். உன்னைக் குறைகூறாது உனது அறியாமையையே குறைகூறிக் கொண்டேம். உனது அறியாமை நீங்க உண்மை கேட்பாயாக.

சங்கற்ப நிராகரணம் முற்றிற்று.



இந் நூலாசிரியர்

திருநெல்வேலி

**கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்** M.A., M.L.,

எழுதிய

# பிற அரிய ஆராய்ச்சி நூல்கள்.

| | | Wrapper. |
|---|---|---|
| திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம் | | 1 4 0 |
| | கலிக்கோ 1 10 0 | |
| திருநாவுக்கரசு சுவாமிகள் சரித்திரம் | | 0 11 0 |
| | கலிக்கோ 1 4 0 | |
| சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம் | | 1 2 0 |
| | கலிக்கோ 1 8 0 | |
| மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம் | | 0 14 0 |
| | கலிக்கோ 1 4 0 | |
| சேக்கிழார் சுவாமிகள் சரித்திரம் | | 1 0 0 |
| | கலிக்கோ 1 6 0 | |
| சங்கராசாரியார் சரித்திரம் | | 0 8 0 |
| | கலிக்கோ 1 0 0 | |
| அறிவு விளக்க வாசகம் | | 0 6 0 |
| தாயுமானவர் வரலாறும் நூலாராய்ச்சியும் | | 1 0 0 |
| பட்டினத்தடிகள் ,, ,, | | 1 0 0 |

| | | | |
|---|---|---|---|
| குமரகுருபரர் வரலாறும் நூலாராய்ச்சியும் | 1 | 0 | 0 |
| சிவஞானமுனிவர் ,, ,, | 1 | 0 | 0 |
| மெய்கண்டாரும், சிவஞானபோதமும் | 1 | 0 | 0 |
| தமிழ் இலக்கிய வரலாறு | 2 | 8 | 0 |
| திருவாசகப்பொழிப்புரை (அச்சில்) | 3 | 0 | 0 |
| திருக்குறள் பொழிப்புரை (அச்சில்) | 1 | 4 | 0 |
| இந்து சமயங்களின் சுருக்கவரலாறு | 0 | 3 | 0 |
| சைவ சித்தாந்த விளக்கச் சுருக்கம் | 0 | 1 | 0 |
| சைவ சித்தாந்த உண்மை வரலாறு | 0 | 3 | 0 |
| திருஞான சம்பந்தர் தேவார இயற்கைப் பொருளழகு | 0 | 4 | 0 |
| முருகன் பெருமை | 0 | 3 | 0 |
| சரித மாலை. (செகப்பிரியரின் வரலாறும், நாடகக் கதைகளும் அடங்கியது) | 0 | 4 | 0 |
| இலக்கிய மாலை. சைவச்சடங்கு விளக்கம் | 0 | 4 | 0 |
| இந்தியச்சட்டக் கோவை. (பதிவுச்சட்டம், இந்தியத் தண்டனைத் தொகுதி) | 0 | 4 | 0 |
| உலகியல் மாலை. (உடல்நூல், நோய் நீக்கம்) | 0 | 4 | 0 |
| Tamil Blooms (*Nature in Thevaram and Ancient Tamil Scripture*) | 0 | 4 | 0 |
| ஆண்டாள் வரலாறு | 0 | 2 | 0 |
| மணிமாலை முன் தொகுதி | 1 | 0 | 0 |
| மணிமாலை தொகுதி 12 புத்தகங்கள் | 5 | 0 | 0 |

குமரன் அச்சகம், காஞ்சீபுரம்.